# நீதிஸாரவாக்யம்.

ம-ா-ா-ஸ்ரீ கொற்றமங்கலம்
இராமசாமிபிள்ளையவர்கள்
செய்தது.

இஃது.
ம-ா-ா-ஸ்ரீ
ஆ-பு-கிருஷ்ணஐயர்
முதலிய சில ஹிந்து கனவான்கள் கேட்டுக்கொண்டபடி
சித்திரகூடம் - இராமாயணம்
கிருஷ்ணயங்காரவர்கள்
சிலவித்துவான்கள் முன்னிலையில்
பரிசோதித்து

ஊ. புஷ்பரதசெட்டியாரது
சென்னை
கலாரத்நாகா அச்சுக்கூடத்திற்
பதிப்பித்தனர்.

1871.

3.00

# நீதிஸாரவாக்யம்.

ம-ள-ள-ஸ்ரீ கொற்றமங்கலம்

இராமசாமிபிள்ளையவர்கள்

செய்தது.

இஃது

ம-ள-ள-ஸ்ரீ

ஆ-பு-கிருஷ்ண ஐயர்

முதலிய சில ஹிந்து கனவான்கள் கேட்டுக்கொண்டபடி

சித்திரகூடம் - இராமாயணம்

கிருஷ்ணயங்காரவர்கள்

சிலவித்துவான்கள்முன்னிலையில்

பரிசோதித்து

ஊ. புஷ்பரதசெட்டியாரது

சென்னை

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தனர்.

1871.

ஸ்ரீராமஜயம்.

சுமார் முப்பது வருஷத்திற்கு முன் காலேஜில் புத்தகபரிபாலகரா யிருந்த ம-ா-ா கொற்றமங்கலம் இராமசாமிபிள்ளை என்பவர், காஞ்சீபுரம் இராமகிருஷ்ணசாஸ்திரி முதலிய பல வித்துவான்களின் உதவியைக்கொண்டு திருக்குறள்முதலான பல நூல்களிலுள்ள கருத்துக்களையும் அனுபவமான திருஷ்டாந்தங்களையும் சேர்த்துச் செந்தமிழ்நடையாக நீதிசாரவாக்கியம் என்கிற இவ்வரிய வாசகபுத்தகத்தை இயற்றி இளைஞர்பயின்று தேறும்பொருட்டு அளித்தனர்.

"இயன்றளவு செய்வா ரியலாத செய்யார்
பயன்றெரி பான்மை யவர்"

இப்படி கற்றுணர்ந்த பெரியோர் உலகிற்கு இழைக்கும் பயனை நோக்கியன்றோ

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்று நாயனார் கூறினார்; ஆதலால், இவ்வருமைப்பொருளைப் பொன்போல் போற்றுவது நமது கடமையாதலாலும், இக்காலத்தில் கற்றுவரும் சிறுவர்களுக்கு இந்நூல் அத்தியந்த உபயோகியாதலாலும், ம-ா-ா-ஸ்ரீ, ஆ-பு-கிருஷ்ணையர் முதலிய சில புத்திமான்களின் வேண்டுகோளினால் பெயர்மறைந்துபோகும் தறுவாயிலிருந்த இந்நூலை இப்பொழுதுயான் பாடசாலைகளுக்கு உபயோகமாக பல நீதித்திரட்டு, பலதொழிற்றிரட்டு என்னும் உறுப்புக்களோடு எழுதிக்கொண்டு வருகிற சிறுவர்போதனை என்னும் நூலுக்கு முதற்பாகமாக அச்சிட்டுப் பிரசுரப்படுத்தினேன்.

சித்திரகூடம் - இராமாயணம் - கிருஷ்ணையங்கார்.

# PREFACE.

**PURUSHARTHAS**, the chief objects to be pursued by mankind, the eminent portion of the living creation, namely, *Dharma* or *Virtue*, *Artha* or *Wealth*, *Cama* or *Love*, and *Moksha* or *Beatitude*, whose merits being hitherto known only to the profoundly learned Pundits, and with which, even the oldest men of ordinary learning are unacquainted, it is now highly desirable that hereafter, at least, our children should know them; for whose easy comprehension, the meaning of those four objects are hereby expounded.

**VIRTUE** means just and moral conduct.

**WEALTH** implying riches acquired without affecting either justice or morality.

**LOVE** meaning enjoyment of lawful pleasures, and

**BEATITUDE** importing eternal happiness in the world to come.

These objects have been arranged in the above manner, for the universal comprehension of their alternate enjoyment. A youth, therefore, previous to beginning his career of life, should first read and understand such Books as inculcate the knowledge of morality, and thereby acquire a sound moral conduct; secondly, procure wealth, through lawful employments and equitable means: thirdly, have a virtuous consort, lawfully married for his companion and attend to all the domestic duties, such as, hospitality towards guests, alms-deeds towards religious mendicants, &c., and, by these and other practices peculiar to the head of a family; latterly, be made fit to obtain eternal and everlasting happiness.

Although there are many and various kinds of Books treating upon the above subjects, yet, the whole of them being in poetical composition, it is difficult to comprehend the minute particulars of their import, but only the gross signification. Consequently, such books are not at present useful to children; and therefore, it is a great desideratum to have a small book inculcating moral sentences in *prose*; for its being considered more useful than works in poetry, this Preface itself will, it is presumed, afford the best proof.

Under the above circumstances, and at the request of the Auxiliary to the "*Hindu Literary Society of Pursevaukum*," the Author has, with his limited knowledge, had recourse to the books of morality in poetry; and extracted the sap of their material tenor with which he composed this work (through the great assistance of a friend well versed in four or five different languages and of quick and ready wit, named *M. R. R. Ramakrishna Sastriar* to whose assistance in the compilation of this work the Author is much indebted and will feel always deeply and sincerely obliged)—arranging and reducing the same into small sentences for the easy comprehension of youths and for the use of Schools.

It contains first, Praise to God, and afterwards the subjects of Learning, and so on, the whole being compiled and arranged after the manner of the Chapters of Cural, to be entitled "*Niti-Sara Vakyam*,"—or "*A Glossary of Moral Sentences*."

In conclusion it is humbly hoped, that the learned will coincide when it is said, that the only compensation which the Author expects is, the satisfaction of seeing this little work accepted by the wise, and used in Schools and that thereby the Children may acquire a clear knowledge of the chief objects of mankind and finally attain endless felicity.

The above-mentioned four Parusharthas, although not distinctly divided in this Book, still the effective splendour by which they shine, will be best made out by the learned.

# வித்வான்களின் அபிமதம்.

ம-ா-ா-ஸ்ரீ

தோல்காப்பியம்வரதமுதலியாரெழுதியசடிதம்.

காலீஜ்புஸ்தகபரிபாலகராகிய-ம-ா-ா-ஸ்ரீ, பிள்ளையவர்கள்

கொற்றமங்கலம்

ராமசாமிப்பிள்ளையவர்கட்கு,

விஞ்ஞாபனம்.

இந்த நீதிஸாரமென்னுஞ் சிறந்த சனபுஸ்தகம் எனது அபிமதம் பெறவேண்டுமென்கிற கோரிக்கையா லென்னிடத்திற் கனுப்பப்பட்டபடி அதைமுழுதும் வாசித்துப்பார்க்கு மிடத்திற் சொன்னயம் பொருணய மிகவும் நன்குயமைந்திருப்பது மன்றி தர்மங்களையெல்லாம் ஸேகரித்து விளங்க வெழுதியிருக்கின்றபடியால், இஃது சிறுவர்கட்கு மாத்ரமேயல்ல, பெரும்பான்மை யாவர்க்கும் ப்ரயோஜனமாக விருக்குமென்பதற்கு ஸந்தேஹமில்லையென்று தோன்றுகின்றது. மேலும் இதிலடங்கியவசனங்களெல்லாம் கம்பீரமாயிருக்கின்றமையால் வாசிப்பதற்கு மிகுந்த களிப்பைத்தருகின்றது. இப்புத்தகத்தில் தர்மநீதிகளெல்லாம் வசனவடிவுகொண்டு வெளிப்பட்டமையால், அவைகள் பாவினங்களிற் பார்க்கிலுஞ் சிறந்துவிளங்குகின்றன. ஏனெனில், பாக்களிலிருக்கும் தர்மஸாரத்தை யுணர்வது ஸாதாரணர்க்கு கடினமாக விருக்கின்றமையினாலே தான். ஆதலால் நம்முடைய தேசத்தி னெடுங்காலமாய்க் குடிகொண்டிருக்கும் அழுக்காறுமுதலிய துர்க்குணங்களிப் புஸ்தகத்தால் இனி தூரவிலகிப்போகுமென்று சொல்வதற் கநுமானப்பட வேண்டியதில்லை.

இவ்வித நன்மைகளைத் தருவதற் காதாரமாக விப்புஸ்தகத்தைத் தாங்கள் வருந்திச்செய்த நன்முயற்சியைக்குறித்து யாவர்தானன்றி கூறுதவர்களாக விருப்பார்கள்? இவர்களில் நான் முதற்புருடனாக விருக்கின்றேன்.

சென்னபட்டணம்
சோபகிருதஹு மார்கழிமீ உகூ } இங்ஙனம்,
வேலூர். வரதமுதலியார்.

ம-௱-௱-ஸ்ரீ, காயல்பட்டணம்

செய்கு அப்துல்காதிர் ஆலிம் புலவர் அவர்களுடைய

## கவிதை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அறிவுளருமற்றவரு மிளையவருமுதியவரு
மன்பாலறிந்துகொளவும்
அகிலமிசைநான்குவரு ணத்தவருமொத்தமுறை
யாமெனவெடுத்தணியவும்
குறியபலபலதொழில்செய் பவர்கடமதொழுகென்று
கொண்டாடியுண்டாடவும்
குலவுமிருவினைமுயல்வ ொருவினையினற்கதிகொள்
கொள்கைநெறியென்றுணரவும்
செறியுமொழிசரசமுட னுவமானகதையேது
திரளுநனிசொற்றொடருமாய்
செவியிடுமனத்தினர்க ளானந்தமாசவரு
செந்தொடைகளைவையென்னிலோ
நறியமலரணிசோலை சூழ்புரசபாக்கத்தி
ராமசாமிப்பிள்ளைதாம்
நனிமகிழ்வினால்நீதி ஸாரவாக்கியமென்று
நயமோடுரைத்தவைகளே.

---

சென்னைக்கல்விச்சங்கத்துத்தமிழ்ப்புலவராகிய

ம-௱-௱-ஸ்ரீ, புதுவை

## நயனப்பமுதலியாரவர்களுடைய கவிதை.

வெண்பா.

எண்ணுமறனும் பொருளு மின்பமும் வீட்டின்பமுமே
நண்ண விராமச்சாமி நப்புனிதன்—திண்ணமுற
ஆக்கியநன் நீதி யமைசார வாக்கியமிம்
மாக்கடல்சூழ் வையக் கணி.

# பாயிரம்.

தர்மார்த்த காம மோக்ஷங்களென்னும் புருஷார்த்தங்கள் இன்னவையென்று இதுவரையில் தக்கபண்டிதர்களன்றி மற்றஸாதாரணமாய்க் கற்றவர்களிலும் வயஸுசென்றவர்களுக்கே தெரியாமலிருந்தாலும் இனியாவது சிறுபிள்ளைகட்குக்கூடத் தெரியவேண்டுமென்பது மிகவும் அகத்யமாகவிருக்கின்றது. ஏனெனில், அவைகளின் அறிவினாலேயே யாவர்க்கும் உலகநடை நிறைவேற வேண்டியதாக விருக்கின்றது. ஆதலால் அவைகள் சிறுபிள்ளைகட்குத் தெளிவாக விளங்கும் பொருட்டு விவரிக்கப்படுகின்றன.

புருஷார்த்தமென்பது - பிறவிபெற்ற ப்ராணிகளுக்குட் சிறந்தவர்களாகிய மனிதரடைய வேண்டிய முக்யமான பொருள்களைவிளக்குகின்ற நால்வகைப் பொருளேயாம்: அவற்றுள், தர்மமென்பது-நன்னெறி யொழுக்கத்தையும், அர்த்தமென்பது-நன்னெறி தவறாமல் ஸம்பாதிக்கப்படும் பொருளையும், காமமென்பது-குற்றமற்ற சிற்றின்பத்தின் அநுபவத்தையும், மோக்ஷமென்பது-மறுமையி லடையும் பேரின்பத்தையுந் தெரிவிக்கும். இவைகளை யாவரும் முறையேயுணர்ந்து உலகநடை நடத்தவேண்டு மெனக்கருதியே மேற்கூறிய முறைமை ஏர்ப்படுத்தப்பட்டது. ஆதலால் ஒருசிறுபிள்ளை லோகவ்யாபாரத்தில் ப்ரவேசிப்பதற்கு முன்னமே நீதிநெறியைவிளக்கும் நல்லபுஸ்தகங்களை வாசித்துணர்ந்து நல்லொழுக்கம் பெற்று நீதிதவறாமல் நற்றொழிலியற்றிப் பொருளையீட்டி விதிப்படி விவாஹஞ்செய்த மனைவியாகிய தர்மபத்னியோடுகூடி அதிதிபூஜை முதலிய நற்கார்யங்களைச்செய்து இல்வாழ்க்கைபெற்றபின் இவைகளைக் கொண்டும் இல்வாழ்க்கைக்குரிய மற்ற நற்செய்கைகளைக் கொண்டும் பேரறிவு பெற்று மோக்ஷமடைய முயலவேண்டுமென்று கருதவேண்டியது அகத்யமாயிருக்கின்றது.

இவைகளை விளக்கும் நூல்கள் பலவாகவிருக்கினும், அவைகளெல்லாம் பாவினமாக விருக்கின்றமையால் யாவர்க்கும் தெளிவாக விளங்காம லிருப்பதுமன்றி நுட்பமான விவரணத்திற் கியலாமல் ஸ்தூலமான அர்த்தங்களைமாத்ரமே விளக்குகின்றன. ஆகையால், இக்காலத்திற்கு அந்நூல்கள் பயன்படாவெனவும், நீதிவாக்யங்களை பிள்ளைகட்கு நுட்பமாய் போதிக்கத்தகுதியான சிறுபுஸ்தக மொ

ன்றியற்றப்படவேண்டு மெனவுங் கருதியதற்கு இந்தவாக்ய நடையே நிதர்சனமாக விருக்கின்றதென்று புத்திமான்கள் யோசித்துக் கொள்வார்கள்.

இக்காரணங்களைப்பற்றி ஹிந்து வித்யா ஸபைக்குதவியாகிய புரசவாக்கம் பாலபோதக வித்யாசாலாஸபையார் கேட்டுக்கொண்டப்ரகாரம் இந்த க்ரந்தகர்த்தா தனது சிற்றறிவிற் கியன்றமட்டும் நீதிநூல்களைப்பரிசோதித்து ஸாரந்திரட்டிக் கல்விச்சாலைக் குபயோகமாகும்படி சீர்திருத்திப் பிள்ளைகளுக்கு எளிதில் பொருள்விளங்கத்தக்க வாக்யங்களிற் புகட்டி முதலில் தேவவந்தனமும் அதன்பின்னர் கல்விமுதலிய வைகளுமாகக் குறளதிகாரப்படி முறைமை ஏர்ப்படுத்தி நீதிஸாரவாக்யமெனப் பெயரிட்டு அச்சிற்பதிப்பிக்க லாயிற்று.

நாலைந்துபாஷையில் வல்லவராயும் புத்திகூர்மையிற் சிறந்தவராயுமிருக்கின்ற - ம-ா-ா - ஸ்ரீ, காஞ்சீபுரம் - ராமகிருஷ்ணசாஸ்த்ரியாருக்கும் இந்தக்ரந்தகர்த்தாவுக்கும் நெடுநாளாயுண்டா யிருந்த ஸ்நேஹத்தினலேயே இதுகார்யம் முக்யமாய் நிறைவேறின படியால், இந்தக்ரந்தகர்த்தா பொதுப்படக் கேட்டுக்கொள்ளும் முக்யமான விஷய மென்னவென்றல், இப்புஸ்தகத்தைக்கண்டு களிப்படைந்து பயன்பெறுவோர் யாவரும்மேல்கண்ட சாஸ்த்ரியாருடைய பேருதவிக்காக மிகுந்தநன்றி யடைய வேண்டுமென்பதுதான்.

இந்தபுஸ்தகம் புத்திமான்களால் அங்கீகரிக்கப்பட்டுக் கல்விச்சாலைகளில் வழங்கி இதனல்பிள்ளைகள் மனத்தெளிவடைந்து வ்ருத்தியாகவேண்டுமென்பதே க்ரந்தகர்த்தா விரும்பிய முக்யமான ப்ரயோஜனமென் றுரைப்பதை புத்திமான்கள் ஏற்றுக்கொள்வார்களென்பதற்குஸந்தேஹமில்லையென்று வணக்கத்துடன் கூறலாகின்றது.

மேற்கண்ட நான்கு புருஷார்த்தங்களும் இப்புஸ்த கத்திற் பிரிவாக விவரிக்கப்படாவிடினும் ப்ரகாசமாய் விளங்குந் தன்மையை புத்திமான்க ளறிந்துகொள்ளாமற் போகமாட்டார்கள். ஆகிலும் அவ்விதபுஸ்தகமொன்று வினவும் விடையுமாகசீக்ரத்தி லியற்றப்படுமென்பதை கிரந்தகர்த்தா நிரீக்ஷித்துக் கொண்டிருக்கிறர்.

கடவுள்துணை.

# நீதிஸாரவாக்யம்.

## தேவவந்தனம்.

எல்லாக் காரியமுயற்சிக்கும் முதலில் ஸர்வகாரணராகிய கடவுளைப் பணியவேண்டுமென்பது மனிதருக்குக் கடமையாக விருக்கின்றது.

உலகமுழுமைக்கும் பகவனே முதலாகவிருக்கின்றார், எப்படியெனில், எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் எப்படி முதலாகவிருக்கின்றதோ அப்படியென அறிந்துகொள்ளவேண்டும்.

அப்படிக்கொத்த ஆதிபகவானுடைய பாதாரவிந்தத்தைத்தொழாதவன் எவ்வளவுகற்றும் பலனென்ன?

அன்பருடைய மனதில் வாஸஞ்செய்கின்ற பகவானுடைய திருவடிகளைப் போற்றிப்பணிகின்றவர்கள் பரலோகத்தில் நற்கதியடைந்து அழிவில்லாமல் எப்போதும் வாழ்வாரென்று அறிக.

வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதபகவானுடைய திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்கு, எக்காலத்தினும் பிறவித்துன்பமில்லை.

இறைவனாகிய பகவானது கீர்த்தியை விரும்பித் துதிசெய்கின்றவர்களுக்கு அந்தகாரம் பொருந்திய கர்மபந்தமொன்று மிராது.

மெய், வாய், கண், மூக்கு, செவி, என்கிற பஞ்சேந்திரியங்களின் வழியால்வருகின்ற ஐந்தாசைகளையும் நீக்கினவர்களுடைய ஒழுக்கநெறியில் நின்றவர்கள், பிறப்பிறப்பில்லாமல் எக்காலத்திலும் ஒருதன்மையுடன் வாழ்வார்கள்.

ஒப்பிடப்படாத பரமாத்மாவினுடைய திருவடிகளையடையாதவர்கள், தமக்குள்ள மனக்கவலையைவிட்டு நீங்கமாட்டார்கள்.

ஸர்வதயாபரனாகிய கடவுளினது பாதாரவிந்தத்தைச் சேர்ந்த வர்கள்தவிர மற்றவர்கள், பிறவிக்கடலைக் கடக்கச்சக்தியுள்ளவர்களாகமாட்டார்கள்.

அஷ்டகுணங்களையுடைய பரமனது பாதங்களை வணங்கிநமஸ்கரியாதவர்களுக்கு, யாதொருபயனுங் கிடைக்கமாட்டாது.

ஆதலால், நம்மைப்படைத்துப் பாதுகாத்து வீடுபெறச்செய்யும் பகவானை ஸ்துதிசெய்ய வேண்டியது அகத்யமென் றறியவேண்டும்.

---

## கல்வி.

இளமைப்பருவத்தில் கல்வியைக் கற்கவேண்டும், கல்வியைக் கற்கச் சோம்பலுற்றவன் தரித்ரத்தை யடைவான்.

கல்வியால் நல்லறிவுமிகும், அதுபெரியோர்கள் சென்றநல்லொழுக்கத்தில் புத்தியைச் செலுத்தும்.

கணிதநூலும், இலக்கணநூலும், மனிதருக்குக் கண்களென்று சொல்லத் தக்கவைகளாம்; ஆதலால், கற்றவர்கள் கண்ணுடையவர்களென்றும் கல்லாதவர்கள் குருடர்களென்றும் சொல்லப் படுவார்கள்.

நன்றாய் வாசித்தறிந்தவர்களை யாவரும்வணங்கி யுபசரிப்பார்கள்; ஆதலால், கல்வியினிடத்து இடைவிடாது சிந்தையைவத்துக் கற்கவேண்டும்.

மணற்கேணி தோண்டுமளவும் நன்னீர்சுரப்பதுபோலக் கல்வியைக்கற்குமளவும் நல்லறிவுமிகும்.

மிகுந்ததூரத்திலிருக்கும் அந்யதேசத்திற்கூட ஸ்வதேசத்திற்போலவுபசரிக்கப்படுவதற்குக் கல்வியே காரணமாதலால் அதை ஒருபொழுதும் விடாது பயிற்சிசெய்து வரவேண்டும்.

இம்மையிற் கற்றகல்வி எழுபிறப்பினுந் துணையாமென்று பெரியோர் கூறுவராதலால், கல்விப்பயிற்சியி னிடத்துச் சோம்பலை யகற்றிக் கற்கவேண்டும்.

கற்றகல்வியினாலே யுண்டாகிய பிரயோசநங் கற்றவர்க்குமாத்திரமன்று, அவர்களையடுத்த மற்றவர்க்கு முண்டாகும்.

பிறருக்குப் போதிக்கின்றவர்களது கல்வி, தினேதினேவளர்ந்தேறுமென்பதற்கு ப்ரமாணாந்தரம் வேண்டுவதில்லை.

சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்ற விதியையும் விலக்கையும் அறிந்து நடக்கின்ற பெரியோர்களுக்குத் தொண்டுசெய்து நடப்பதே வித்யார்த்தியின் கடமையாம்.

அறிவுடையவர்களினது ஸபையிற்செல்லுங் கல்வித்திறத்தோர் மேம்பாட்டை யடைவார்க ளென்பதற்கு, அவர்களுடைய ஸலக்ஷணமான கல்வியே காரணமென்று சொல்லப்படும்.

பலநூல்களை யாராய்ந்து அவைகளின் ஸாரமான பொருள்களைச்சிந்தையில் வைத்து உலகநடை யியற்றுவதே கல்வித்திறத்தோர்க்கழகாம்.

சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்ற முடிவான பொருளின்னதென்று அறிவதற்கு அதிககேள்வியும் அறிவும்வேண்டுமாயினும் அதற்குக் கல்வியேகாரணமாதலால் அதைக்கற்கவேண்டும்.

சாஸ்திரங்களை ஆராய்ந்து அவற்றிலுள்ள பொருள்களைப் பகுத்தறிந்து பிறருக்குபயோகப் படுத்துவதனால் நன்மையுண்டாகும்.

கல்வியைக்கற்றும் அறிவுவிளங்காதாயின் கற்றதனாற் பயனில்லை ஆதலால், அறிவோடு கல்விகற்கவேண்டும்.

அறிவுடையவர்கள் கற்றகல்வியின் உண்மை, வித்தி சந்திரன்போல் வளர்ந்தேறும், ஆதலால் அவர்களிடத்து எப்போதும் பழகுதலால் வித்யார்த்திகளுக்கு மிகுந்த நன்மையுண்டாகும்.

நன்மார்க்கத்தையடைய விரும்புகின்றவர்கள், பலநூல்களை ஓதியுணரவேண்டும், அதனால் மனதிலுள்ள பற்றுநீங்கும்.

கல்விப்பொருளை யறிந்த அறிவுடையவர்களுடைய வரவுக்கு யாவரும் எதிர்பார்ப்பார்கள். மற்றவர்களையோவென்றால், அப்படி-

நோக்காராதலின், கல்விப்பொருளே யெல்லாவற்றிலுஞ் சிறந்ததென்றறியவேண்டும்.

இலக்கணநூலை யறியாதவர்களோடு பழகவேண்டாமென்றுபெரியோருரைத்தது சரியேயென்று நம்பவேண்டும்.

இலக்கணநூலையறிந்து மறியாதவனைப்போல நடப்பவன் ஸ்னேஹம்செய்யலாகாதென்பதும் அப்படியே,

கல்வியைக்கல்லாத அறிவிலர்களுடைய கூட்டத்திற் கலந்து, சேர்ந்தால் பலதீமையுமுண்டாகுமென் றறியவேண்டும்.

பொய், களவு, முதலான தீயவைகள் நம்மைச்சேராமலிருக்கும்படி முன்னாடி ஸஜ்ஜனமந்திரிபோலிருந்து எச்சரிக்கைசெய்கின்றது கல்வியாதலால், அதைவிரும்பிக் கற்கவேண்டும்.

கல்வியைநன்றாய்க்கற்ற புத்திமானுக்கு அதைவிடத் தோழமை வேறு வேண்டுவதில்லையென்று பெரியோருரைத்திருக்கின்றார்கள்.

தீபம் இருளைத் துலக்குவதுபோலக் கல்வியாகியதீபம் மனிதர்களுடைய தெரியாமையென்னும் இருளைத்துலக்கி நல்லறிவை விளக்கும்.

சூரியன், சந்திரன், சுடர், இம்மூன்றுமிருளைத்துலக்குமாயினும், ஒவ்வோர் காலத்திலும் ஒவ்வோரிடத்திலுமாத்ர மப்படிச்செய்யும், கல்வியானது அதனைப்பெற்றவருக் கெப்போதும் எவ்விடத்திலுமிருளையகற்றி எப்பொருளையும் விளங்கச்செய்யும், ஆதலால் அஃது கல்விச்சூரியனென்றும், கல்விச்சந்திரனென்றும், கல்விச்சுடரென்றும், சிறந்தபெயர்களைப் பெறும்.

கல்விப்பொருளிலுஞ் செல்வப்பொருளிலும் கல்விப்பொருளேசிறந்ததாம், ஏனெனில், செல்வப்பொருள் செலவழியும், அதைக்குறித்து களவுசெய்யப்படும், கொடுக்கப்பட்டால் குறைந்துபோகும், கல்விப்பொருளோவெனில், கொடுக்கக்கொடுக்க மேன்மேலும் விருத்தியாகும், செலவழித்தாலும் பெருகுமேயல்லது குறையாது, களவிற்கும் உரித்தாகாது, ஆதலால், கல்வியைக்கற்றவனுக்கு ஒருக்காலுங் குறைவில்லை.

திரவியத்தினிடத்தில்வைத்த ஆசையால் கல்வியாகிய தெப்பத்தைக்கைவிட்டால் திரவியமிருந்தும் பயன்படாது, அதையுடையவரும்பெருமையடையார்.

கல்வியினால் நல்லொழுக்கமும், நல்லொழுக்கத்தினால் யோக்யதையும், யோக்யதையினால் பொருளும், பொருளினால் தர்மமும், அதனால் ஸுகமுமுண்டாகுமாகலால், எல்லாநன்மைக்கும் கல்வியே காரணமாக விருக்கின்றது.

ஒரு வித்வான் படிப்பிலூக்கமில்லாமல் விளையாடிக்கெட்டுப்போகிறதனது குமாரரைப்பார்த்து ஐயோபிள்ளைகளே நீங்கள் கல்விகற்கச் சோம்பலுற்றிருக்கிறீர்களாதலால், உங்களுக்கு வயது வரும்போது கல்விமான்கள் முன்பாக உளையிலழுந்திய கடாப்போல் விழிப்பீர்களென்றான். ஆதலாலிதைக்கருதித் தக்கபடி நடக்கவேண்டும்.

கல்விகற்றவன் எவ்வளவுதாழ்ந்தவனாக விருந்தாலும் அது அவனை மேம்பாடடையச்செய்யும், ஆதலால் பால்யமிருக்கும்போதே வித்தையைக்கற்கவேண்டும்.

சஸ்திரவித்யை, சாஸ்திரவித்யை, இவ்விரண்டிலும் சாஸ்திரவித்யையே சிறந்ததாம். ஏனெனில், முற்கூறியது முதுமையில் உபயோகப்படாது, பிற்கூறியது எப்பொழுதும் பெருமைபெறும்.

கல்விமான்களிடத்தில் நற்குணங்களே விளங்கும், மூர்க்கரிடத்தில் குற்றங்கள்விளங்கும், ஆதலால், ஆயிரம்பெயர், மூர்க்கருக்குள் கல்விமானொருவனிருந்தாலும் அவனே பூஜிக்கப்படுவான்.

எல்லாச்சங்கைகளையும் அறுத்துப் புறப்பொருள் யாவையும் விளக்கும் சாஸ்திரங்களே கண்களெனப்படும். ஆதலால் அக்கண்களில்லாதவன் குருடனெனப் படுவதற்குச் சந்தேகமில்லை.

கல்வி ஆரம்பத்தில் வருத்தமெனுந் துன்பத்தைத் தோற்றுவிக்கும், பின்பு ஸாதிக்கப்படுமாகில் மடமையெனும் அறியாமையை நீக்கி விவேகத்தையுண்டாக்குவதுமன்றி, செல்வத்தையுஞ் சிறப்பையும் பெருகச்செய்யும், எப்படியெனில், பயிர்செய்யுங்குடியானவனுக்

கு அதுமுதலில் கஷ்டத்தையுண்டாக்கி முடிவில் சௌக்யத்தைக் கொடுப்பதுபோலேதான்.

யாவருக்கு மழகுண்டாகும் நவரத்னாபரணங்களுக்கு அழகு செய்யவேண்டுமோ ? அப்படியே கல்வியெனும் பூஷணத்தையுடையவனுக்கு வேறுபூஷணம் வேண்டுவதில்லை.

கல்வியானது தாழ்ந்தவனையடைந்திருந்தாலும் அவனை மேம்பாட்டான ராஜஸமுகத்திற்சேர்க்கும்; எப்படியெனில், மகாநதியானது இயல்பாகத் தாழ்ந்தவிடத்தை யடையத்தக்கதாயினும் எளிதிற்சேரக்கூடாத சமுத்திரராஜனைச் சேர்வது போலேதான்.

முதலிற் கல்வியைக்கற்று பின்பு பொருளையீட்ட விரும்பிய புத்திமான் அத்தொழில்களை நடத்துகிற விஷயத்தில் தனக்குமுதுமையும், மரணமு மில்லையெனக் கருதவேண்டும். தர்மம்புரியுதிலோவெனில் அப்போதே கூற்றன் குடுமிகொண்டதாக நினைக்கவேண்டும்.

ஆதலால் கல்வியானது சகலவிதத்திலும் முக்யப்ரயோஜனத்தை யுண்டாக்குமெனக்கருதி, அக்கல்விச்செல்வத்தைப்பெருக்கி வாழவேண்டும்.

---

## கல்லாமை.

ஸபையிற்பேச விருப்பங்கொள்ளுகிறவன் கல்வியில்லாதவனாகில் செல்வத்தை யுடையவனாகவிருக்கினும் அவமானப்படுவானென்பதற்குச் சந்தேகப்படவேண்டியதில்லை.

புலவர்களின் கூட்டத்திற்சென்ற கல்வியில்லாதவன் பேசாதிருப்பானாயின் அவனது கல்லாமை வெளிப்படாதாகையால் அவனுக்கிழுக்கு நேராமலிருக்கும்.

கல்வியினிடத்துப் பொருந்தாத சிந்தையுடையவனது அறிவு மிகவுந்தெளிவாக விருக்கினும், ஸபையிற்பேசுமிடத்துத்தகுந்த பிரயோஜனத்தைக் கொடாதாதலால், அவன் வெட்கப்படுவான்.

கற்றவர்களே கண்ணுடையவர்கள் கல்லாதவர்களுடைய முகத்திற் காணப்படு மிரண்டுகண்களும் புண்களெனப் பெரியோருணாத்திருக்கிறார்கள்.

கற்ற பெரியோர்கள்முன் சென்றுபேசுங் கல்வியில்லாதவன், தனக்குள்ள பெருமையையுமிழந்து அவமானத்தையுமடைவான்.

கல்வியையறியாதார் சிலருண்டு, அவர்கள் களர்நிலத்தைப்போலச் சிறிதும் பயன்படார்கள், ஏனெனில் களர்பூமியில் புல்லும்விளையாது, அதுபோலவே கல்வியறிவில்லாதார் மானிட ஸ்வரூபத்தைப் பெற்றிருந்தும் உலகத்திற்குப் பொதுவான நன்மையைச்செய்யத்தக்க விவேகத்தையுடைத்தா யிருக்கமாட்டார்கள், ஒருவேளை நற்காரியத்தைச் செய்ய ஈயலினும், அதுநிறைவேறுவது அரிதாக விருக்குமென்று பெரியோர்களுணாத்திருக்கிறார்கள்.

கல்வியைக்கற்கச் சோம்பலுற்றவன், உருவத்தில் சிறந்த அழகுடையவனாக விருக்கினும் (அழகாகச் செய்யப்பட்ட மண் ப்ரதிமைபோல) உலகத்தில் ஒருபலனையுமடையமாட்டான். ஏனெனில், அவனுக்கு யுக்தாயுக்தங்களைத்தெரிவிக்கின்ற சாஸ்திரவிசாரணை செய்வதற்கு வேண்டிய கல்வியறிவில்லாமையால், இம்மையில்தானடையவேண்டிய நற்பயனையிழந்து மறுமையிலும் மோக்ஷத்தையடையாமல் நரகத்தையடைவானென்பதினாலேதான்.

கற்றவர்களிடத்துண்டாகிய வறுமைகூட ஒருவனையும் கெடுக்கமாட்டாது, கல்லாத மூடரிடத்துண்டாகிய செல்வமும் அவனையும் மற்றவர்களையும் கெடுக்குமாதலால், அதற்கு இதுகொடியதாகும்.

கல்லாதவன் உயர்குலத்தானாக விருக்கினுந் தாழ்ந்தவனென்றும், கல்வியிலும் அறிவிலுஞ்சிறந்தவன் இழிகுலத்தானாக விருக்கினும், உயர்ந்தவனென்றும், பலநூலிலுஞ்சொல்லியிருக்கின்றது.

மிருகங்களுக்கு மனிதரெவ்வளவு உயர்வினராவரோ அவ்வளவு கற்றவர்முன் கல்லாதவர் தாழ்வினராவர், ஏனெனில் கற்றவர்முன் கல்லாதவர் வாயைத்திறக்க அஞ்சுவார்களென்பதினாலேதான்.

கல்விமான்களுடைய கூட்டத்தில் வந்திருந்த ஒருகல்லாத அழகுள்ள புருஷனைப்பார்த்து ஒருவித்வான் சொல்லியதாவது:—ஓ!

காகமே, நீமாமரத்தின்மீது குயில்களுடைய கூட்டத்திற்சேர்ந்திரு க்கிறாயாதலால் நீவாயைத்திறந்து கூவாமலிருக்கிறவனாயில் உன்னை யுங் குயிலாகவேநினைக்கிறேன்; ஏனெனில், இடத்தின் பெருமையா ல் சிலபொருள்கள் பெருமையடைவதுண்டு. அஃதெப்படியெனில், கஸ்தூரியுண்டாகிற நேபாளதேசத்தின் ராஜாவினுடைய நெற்றியி ற்பட்ட மையைக்கூடக் கஸ்தூரியென்று சொல்வதற்குச் சந்தேகமி ல்லையல்லவா? என்றான்.

கல்வியில்லாத சிலபேதையர்கள் கல்விமான்களெனப்பெயர் பெ றும்பொருட்டு புலித்தோலைப்போர்த்த பசுவைப்போல, ஜனங்களை ப்ரமிக்கச்செய்யினும் கல்விமான்களாகார்.

ஆகலால் கல்லாதிருக்குந் தன்மையாலுண்டாகும் நஷ்டத்தை யுமிழிவையும் யோசித்து நடக்கின்றவர்கள் அறிவுடையவர்க ளாவா ர்கள்.

---

## கேள்வி.

கேள்வியாலுண்டாகும் விவேகச்செல்வம் நிலைபெற்றிருப்பது போலப் பொருளினாலுண்டாகுஞ் செல்வம் நிலைபெற்றிராது.

கேள்வியை விரும்புகின்ற புத்திமான்கள் ஆஹாரத்தினிடத்து விருப்பங்கொள்ளார்கள் ஏனெனில் நல்லசொற்களையுடைய வசனம் மதுரமான அம்ருதபானத்திற் கதிகமானதென்று பெரியோர்களுரை த்திருப்பதினாலேதான்.

நல்லவிவேகிகளுடன் தொண்டுபட்டுக் கேள்விபெற்றவர்கள் து ன்பத்திற் கிடங்கொடார்கள்.

கல்வியில்லாத ஒருவனுக்குப் பெரியோர்களினது கேள்விமாத் ரமுண்டாயிருக்குமாயின் அது தளர்ச்சிவந்தபோது காக்கும்.

ஒழுக்கமுடையவர்கள் சொல்லியசொல் ஆபத்துவந்தவிடத்தி ல் ஊன்றுகோல் போலுதவுமாதலால் அச்சொல்லினிடத்து புத்தி யை யிடைவிடாது செலுத்தவேண்டும்.

கேள்வி கொஞ்சமாகவிருக்கினும் அது நல்லதாகவிருக்குமாயின், மிகுந்தபெருமையுண்டாக்கும்.

கல்வியிலுங்கேள்வியிலும் மேன்மையடைந்தவர்கள் தாமஸகுணத்தினலே பிழைபடவறிந்தாலும் அறிவுவிளங்காச் சொற்களைச் சொல்லார்கள்.

நுட்பமான நல்லகேள்வியில்லாதவர்கள் தம்மைத்தாமே புகழுவதல்லது பிறராற் புகழப்படார்கள்; அதனலவர்கள் ஹீனத்வத்தை யடைந்து நாணமுற்றிருப்பார்கள்.

நிறம்பக் கற்றோர்களுடைய வாய்மொழிகளைக் கேளாதவர்களினது செவி மற்ற ஓசையைக் கேட்குமாயினுஞ் செவிடாகவே மதிக்கப்படும்.

அறுசுவைகளேயன்றி கேள்விச்சுவையறியாதவர்கள் இறந்தாலும் வாழ்ந்தாலும் உலகத்திற்கியாதொரு லாபமும் நஷ்டமுமில்லையென்று பெரியோருரைத் திருக்கிறார்கள்.

ஆகலால் பெரியோர்களுடைய கேள்வி யெல்லாநன்மைகளையும் எளிதிலுண்டாக்குமென நம்பி, அதற்கு இடைவிடாது காது கொடுத்து நடக்க வேண்டும்.

---

## அறிவுடைமை.

சோர்வுவராதபடிக்கும், பகைவராற்றுன்பம் வராதபடிக்கும், காக்கின்றதற்கு அறிவேகாரணமாதலால், அதனிடத்து எப்போதும் சிந்தைவைத்து நடக்கவேண்டும்.

மனம்போனவழியிற் புத்தியைப்போகவிடாமல் நன்மார்க்கத்திற் செலுத்துவது அறிவே யாதலால், அதைசிந்தித்திருக்க வேண்டும்.

மாறி மாறிவரும் (ஸாத்விகம், ராஜஸம், தாமஸம், எனும்) முக்குணங்களின் தன்மையால் நல்லபொருளைத் தீயோரிடத்திலும் தீயபொருளை நல்லோரிடத்திலும் கேட்கினும், அவைகளின் தன்மைகளைப் பகுத்தறிந்து, உண்மை இஃதென்று கண்டறிவதே அறிவாம்.

அறிவில்லாதமனிதர் வறுமையிற்றுன்பப்படுவதற்குப் பல த்ருஷ்டாந்தம் வேண்டுவதில்லை; ஏனெனில், அறிவுடையவன் பலஹீனனாக விருந்தாலும் இக்கட்டுவந்தவிடத்துத் தப்பித்துக்கொள்வான்; அறிவிலான் பலசாலியாக விருந்தாலும் ஒருவனால் உயிரிழக்கும்படி நேரிட்டகாலத்தில் தப்பித்துக்கொள்வது கடினமென்று முன்னோருரைத்த ப்ரமாணத்தால் தெரிந்துக்கொள்ளலாகும்.

பின்வரும் நன்மை தீமைகள் இவ்விதமாக வருமென்று புத்திகூர்மையால் முன்னறிந்து நடப்பவர்களே அறிவுடையாரென்றும், அப்படிக்கறிந்து நடவாதவர்க ளறிவிலாரென்றும் பெரியோர்சொல்லி யிருப்பதை நாமும் அநுபவமாக வறியவில்லையோ?

இதற்கொரு கதையுண்டு; எப்படியெனில், ஓர்தடாகத்தில் மூன்று மீன்களுண்டு; அவைகளிலொன்று வருங்காரியமறிந்து தக்கபடி முயலுமறிவுடையது; மற்றொன்று ஒருகாரியம் நேர்ந்தபின் தகுதியான யுக்திசெய்து பலனடையத்தக்க அறிவுளது; மூன்றாவது வருவதுவராமற் போகாதென்று கருதிமுயலாமலிருக்கும் புல்லறிவுளது. இம்மூன்று மத்ஸ்யங்களும் நெடுங்காலமாய் அத்தடாகத்தில் வாஸஞ்செய்துவருகையி லொருநாள் ஓர்செம்படவன் மீன்பிடிக்கவந்தான். அவன்வந்த அரவங்கண்டு வருங்காரியமறிந்து முயல்கின்ற மீன்தடாகத்தின் பாதாளத்தில் மூழ்கி மண்ணைக்கடித்துக்கொண்டோரிடத்தில் அடங்கியிருந்தது. ஸமயோசித புத்தியுள்ள இரண்டாவது மீன் அப்படிக்குச்செய்யாமலிருந்தபடியால், செம்படவன் எறிந்த வலைக்குள்ளகப்பட்டு வருந்தித்தப்பிப்போக வென்னவழியென் றாலோசித்து ப்ராணனையிழந்ததுபோற் கைகால்களை யசைக்காமல் அவன் போட்டவிடத்திற் கிடந்து ஸமயம்பார்த்துத் துள்ளித்தொப்பென்று தண்ணீரிற்குதித் தோடிப்போய் க்ஷேமமடைந்தது. வந்தது வராமற் போகாதென்கிற நினைப்புள்ளமீன் வலையிலகப்பட்டதுமன்றி செம்படவனாற் கரையிற் போடப்பட்டவுடனே துள்ளித்துள்ளி விழுந்தபடியால் இது தண்ணீரில் வீழ்ந்தோடிப் போகுமென்று நினைத்துச் செம்படவன் அதைக்காலால் மிதித்துக்கொன்று போட்டான். ஆதலால் வருங்காரியமறிந்து நடப்பவனை உத்தமபுத்திமானென்றும், ஸமயோசித புத்தியுளவனை மத்யமனென்றும், வந்ததுவரட்டுமென்றிருப்பவனை அதமனென்றும் சொல்லவேண்டும்.

பழிபாவங்களுக் கஞ்சாதிருப்பது மூடருடையதன்மை. அஞ்சி நடப்பது அறிவுடையவர்களுடைய செய்கையாம். ஆகலால் அறிவு எல்லாவற்றிற்கும் சிறந்ததென நம்பவேண்டும்.

எல்லாச்செல்வங்களுக்கும் அறிவேகாரணமாதலால் அறிவுளோர்க்கொன்று மில்லாவிடினு மெல்லாமுண்டென்றும், அறிவிலார்க்கு எல்லாமுளவாயினு மொன்று மில்லையென்றும் பலநூலிலுஞ் சொல்லியிருக்கின்றது.

ஆகலால் அறிவைநோக்கி யுலகத்தோடொத்து வாழவேண்டும்.

---

## புல்லறிவாண்மை.

ஆழமறியாமற்காலை யிடுகிறவன் தனக்குத்தானே யமனுவானென்பதற்கு அவனது புல்லறிவாண்மையே காரணமாகவிருக்கின்றது.

எதையும் விபரீதமாக நினைத்துத் திகைக்கின்றவன் மூடரில் தலைமையானவனெனக் கருதவேண்டும்.

நன்றி யின்னதெனத் தெரிந்துகொள்ள மாட்டாதவன் மனிதனாக வுருக்கொண்டிருக்கினும் ஸூத்ரக் கயிற்றால் அசைவுறுமரப்பாவையின் தன்மை யுடையவனென் றெண்ணப்படுவான்.

மோக்ஷத்திற்குறுதியைத்தரும் நல்வசனங்களை விரும்பிக் கேளாதவர்கட்கு வலிவிற்போய் அவைகளையெளிதிற் சொல்ல விரும்புகின்றவன் கியானியாக விருந்தாலும் பேதையரிற் பேதையெனப்படுவான்.

எண்ணிக்கையில்லாமல் வைக்கப்படுகின்ற த்ரவியம் குறைவையடையுமென்பதற்கு ஸந்தேஹிக்க வேண்டுவதில்லை; எப்படியெனில், அறிவில்லாதவன் கைப்பொருள் அவனையல்லாமலே அழிந்துவிடுமென்பதுபோலேதான்.

அறிவென்னுந் தீபமில்லாதவர்கள் வாழுமிடம் அந்தகாரமான இருள்மூடிய காட்டுக்கொப்பாகும்; ஆதலாலவர்களோடு நேசஞ்செய்வதில் ஒருபலனுமில்லாமற் போகிறதுமன்றி பற்பல விக்கட்டுகளும் நேரிடும்.

தம்மைத்தாமே புகழ்கின்றவர்கள் வித்வான்களாக விருக்கினும் அவிவேகிகளென விகழப்படுவார்கள்.

மதம்பொழிகின்ற யானை முன்னிட்டவர்களைக் கொல்லுமென்றறிந்திருந்தும் அதற்கு முன்னேடுகிறவன் பலாட்டியனாக விருக்கினுமுயிரிழக்கும்படி நேரிடுமென்றறியாதவன் அறிவிலானாவான்.

ஆதலால் அறிவின்மையானது எல்லாநன்மைகளுக்கும் பங்கத்தை யுண்டாக்குகின்றதால் அந்த மௌட்யத்திற் கிடங்கொடாது நடத்தலே நன்மார்க்கத்திற்கோ ரேணியாக விருக்கும்.

---

## நட்பு.

அன்பை வ்ருத்திசெய்கின்ற நட்பாளரை யெக்காலத்துங் கைவிடாது நேசித்திருப்பதே ஸ்நேஹத்திற்கழகு.

அன்புடன் ஸ்நேஹிப்பவர்களை யெப்பொழுதுங் கைவிடாமல் அவர்கள் வ்ருத்தியாகும்படிக்குத் தன்னாற்கூடிய வுதவிசெய்து புகழடைவதே பெருமையாம்.

நெடுங்காலமாய்ப் பழகிவருந் தொடர்ச்சியையுடைய நல்லோர்களை நன்குமதித்துக் காக்கவேண்டும்.

சுற்றத்தார் மகிழ்ச்சியடையும்படி யவர்களைத் தழுவிவாழ்தலால் அவர்கள் செய்யுமுரிமைகொண்டு பெருமையடையலாகும்.

இனிய செய்கையுடைய நல்ல விவேகிகளின் நட்பைக்கொண்டு அவர்களோடு கூடிவாழ்வதைவிடத் தர்மம்வேறொன்றில்லை.

நட்பின் முறைமையில் "நீரும்பாலும்போல" வென ஓருவமையுண்டு; எப்படியெனில், பாலானது காய்ச்சப்படும்போது தண்ணீரானது தான் ப்ரவேசித்து அக்காய்ச்சல் வருத்தத்தை மேற்கொண்டு மித்திரனைக்காக்கவிரும்பிச் சுண்டிப்போகின்றது; அதுகண்டு பாலானது பொங்கிநெருப்பில் வீழ்ந்தெரிந்து போகமுயல்கின்றது; அதைக்கண்டு பொறுக்காமற்றண்ணீர் மறுபடி மேல்விழுந்து பாலை நெருப்பில் விழவொட்டாமல் காக்கின்றது. இதுவே "க்ஷீரோதக ந்யாயம்" எனப்படும். பால் காய்ச்சப்படும்போது தண்ணீர் கலக்கப்படுவதும்

அது கண்டினவுடனே பால் பொங்குவதும் பின்பு தண்ணீர் கலக்கப் படுமாகில் பொங்காமலடங்குவதுந்தான்.

ஹீனரோடுகூடி துர்மார்க்கங்களை யநுஸரித்துப் பாபத்திற்கு ஹேதுவான காரியங்களைச் செய்கிறவன் நல்லகுடியிற்பிறந்தவனாக விருந்தாலும் அவிவேகியெனப்பெயர் பெறுவதுமல்லால் குலஹீந னென்றும் பெயர்பெறுவான்; ஆதலால் மேன்மக்களோடு நட்புசெய்ய வேண்டும்.

செல்வம்வந்த காலத்திலுஞ் ஸ்நேஹத்தை மறவாமலதிகமான அன்பைச்செலுத்தித் தகுந்தவுதவிசெய்கின்றவர்களை ஸ்நேஹர்க்குள் தலைமையானவர்களாக வெண்ணவேண்டும்.

சுற்றத்தாரை விட்டுநீங்கித் தாம் விரும்பியவைகளைத் தம்மனவழி ன்படிச்செய்து நடக்கின்ற அறிவீனர்களோ டுறவுசெய்யலாகாது, அதனால் தீங்குநேரிடுவதுமன்றிக் கீர்த்திக்குங் கேடுவரும்.

நம்மிடத்தில் யதார்த்தமாக நம்பிக்கைவைத்திருக்கின்ற ஸ்நேஹி தரிடத்துப் பொய்சொல்ல வொருபோதும் விருப்பங்கொள்ளலாகா து, அப்படிவிரும்பினால் வஞ்சகனென்கிற பெயருண்டாவதோடு ஸ்நேஹபங்கமும் நேரிடும்.

உரிமையாகநினைத்துச் சொல்லப்படும் யதார்த்தத்தைப் பொய் மையாகவெண்ணி மெய்யான ஸ்நேஹனை விரோதிக்கின்றவன் புத்தி சாலியல்ல வென்பதற்கு ஸந்தேஹமில்லை. ஏனெனில், அதனால் அ வனடையவேண்டிய எல்லாப்பயன்களையு மிழந்துவிடுவா னென்பத னாலேதான்.

விவேக மில்லாதவனுடைய நட்பைக்காட்டிலும் விவேகியினு டைய பகையினாற் பயனுண்டென்று பெரியோர் கூறியதற்குப் பொ ருளென்னவெனில், புத்திமான்களுடைய ஸ்நேஹத்தை விரும்பித் தேடவேண்டு மென்பதுதான்.

மெய்யான நட்பாளருடைய வொருமை வியோகமுதலான கார ணங்களாற் கெடமாட்டாது, எப்படியெனில், சந்த்ரன்மேகத்தினாற் சூழப்பட்டு நெடுந்தூரத்திலிருந்தாலும் ஆம்பல்களை மலர்ப்பித்து வாஸிக்கும்படிச் செய்யவில்லையோ?

அதிகஸ்நேஹத்தினால் அவிவேகிகள் ஸ்நேஹருடைய பெருமையையுங் குணங்களையுமறியாமற் போகிறதுமல்லாமல் அவர்களையலக்ஷ்யஞ்செய்கிறார்கள், அதெப்படியெனில் சந்தன வ்ருக்ஷங்கள் அதிகமாயிருக்குங் காட்டிற் கருகிலிருக்கின்ற மூடர்கள் அதை யெரிகரும்பாக வழங்குந் தன்மைபோலேதான்.

ஸம்பத்துண்டானால் ஸ்நேஹர்கள் அதிகமாய்க்கூடுவார்கள், ஆனால் அவர்கள் மெய்யானஸ்நேஹிதரோ அல்லவோவென்று அறிவதற்கு தரித்ரம் உரைகல்லாயிருக்கும்.

ஆதலால் மேன்மைபொருந்தியவர்களுடைய நட்புக்கிட்டுங்கொண்டாதிருப்பது வறுமையிலுங் கொடியதென்றுணரவேண்டும்.

---

## பகை.

எந்தக்காரணத்தாலாவது நேரிடும்விரோதத்தைத் தீர்க்கமாய் மனதில்வைக்கின்றவர்கள் மூர்க்கரென்கிற பெயரை யடைவார்கள்.

எப்பொழுதும் மனதில் பகையையுடையவன் எவ்வளவு மேன்மையுடையவனாக விருந்தாலும் அவனால் ப்ரயோஜனமுண்டா யிருக்கினும் அவனோடு கூட்டுறவுசெய்வதைவிட்டு வெறுமையாக விருப்பதுநன்று.

தனது யஜமானனிடத்தில் குற்றத்தைப் பாராட்டிப் பகைத்துக்கொள்ளுகின்ற ஊழியன் தனக்குத்தானே சத்ரு வாவானென நம்பவேண்டும்.

தீர்க்க வைரம்வைக்கின்றவன் தனக்குச் சுற்றத்தானாக விருக்கினும் அவனை யந்யனாகவே நினைக்கவேண்டும்.

எல்லா வுயிர்களுக்குங் கெடுதியைத்தருகின்ற தீயகுணமாகிய பகையை ஒருவன் தன் மனதினிடத்திருந்து பற்றற வொழிப்பானாகில் அது தர்மங்களுக்குள் சிறந்த தர்மமாக ப்ரகாசிக்கும்.

ஒருவருடனொருவர் நட்புபெற்றிருப்பதைப் பார்த்து ஸஹியாமல் பகையை விளைவித்துத் துன்பஞ்செய்கின்றவர்கள் யாவரிலும்

தாழ்ந்தவர்களென்றும் அப்படிக்கல்லாதவர்கள் உயர்ந்தவர்களென்றும் பெரியோருரைத்திருக்கிறார்கள்.

பலவிதத் துன்பங்களையும் விளைவிக்கும் பகையாகிய துர்க்குணத்தை மனஸிலிருந்து நீங்கும்படிச்செய்கின்ற ஒருவனுக்கு எல்லாரும் நட்பினராவதுமன்றி புகழுங் கீர்த்தியும் மேன்மேலும் வளர்ந்துவரும்.

எல்லாத்துன்பத்திற்குங் காரணமும், நற்குணத்தைக் கெடுப்பதற்கு ஹேதுவுமாகிய பகையென்னுந் துர்க்குணத்தை ஸ்வப்நத்திலுஞ் சிந்தியா திருப்பார்களாகில் அவர்களுக்கு ஸகல நன்மையுந் தானேவந்து கைகூடும்.

பகையானது தோன்றியவப்பொழுதே யதை மனஸினிடத்திருந்து நீக்கவல்லவர்களுக்கு உலகத்திலுள்ள யாவரும் அன்பினராவார்களாதலா லவர்களை யார் ஸாதிக்கநினைக்கின்றவர்கள்.

பகை தனக்கினியதென்றதை மேற்கொண்டு விரோதத்தைப் பாராட்டுகிறவன் மேன்மையடைந்திருந்தாலும் உடனே தனக்குள்ள மேன்மையையும் பொருளையுமிழந்துவிடுவதுமன்றி உயிரையு மிழப்பான்.

பகையை மனதினிடத்துக் குடியாகவுடைய அறிவீனர் வெற்றிபெறுதற்குக் காரணமாகிய நீதிநூலினிடத்துண்டாகிய பொருளையுணர்ந்து முணரமாட்டார்கள்.

பகை அல்லது வைரம் எனும் களை முளைக்கும்பொழுதே யதை விவேகமெனுங் கூரியவாளைக்கொண்டு கொய்து விடுவானாகில் அவனுக்குப் புகழும்பெருமையு முண்டாகுமென்பது எப்படியோ அப்படியே அதனுக்கிடங்கொடுத் தெருவூட்டி வளர்ப்பவனுக்குப் பழியும் பாவமும் வளர்ந்தேறுமென்று சான்றோருரைத்திருக்கிறார்கள்.

ஆதலால் யாவரும் பகையென்னுந் துர்க்குணத்திற் கிடங்கொடாமல் அதைநீக்கி நற்குணத்தைக்கைப்பற்றி நடக்கவேண்டும்.

---

## கோபம்.

விவேகமின்மையால் சாந்தகுணத்தைவிட்டுக் கோபத்திற் கிடங்கொடுக்கின்றவன் மூர்க்கனெனப்பெயர் பெறுவான்.

ஒருவன் வைதசொற்களுக்குக் காதுகொடுத்துங் கேட்டாதவன் போல் மனமொடுங்கியிருப்பதே குணவான்களுக்கழகு.

பெரியோர்களுடைய ஸபையின் முன்னிருந்து அறிவின்மையால் க்ஷேபங்கொண்டு இழிவானசொற்களை மதுரமான சொற்களாக வெண்ணி ப்ரயோகிக்கின்றவன் மனிதரிற் பதரென்றிகழப் படுவான்.

மனவிலுதிக்குங் கோபத்தை யடக்கத்தக்க சாந்தகுணத்தையெப்போதுங் கைவிடாது காப்பதே புருஷருக் கழகெனப்படுவது மன்றி அப்படிக்கொத்தவனுக்குப் பெருமையே வருமெனவும் ஒருபோதுந் தாழ்வுவராதெனவுங் கூறப்பட்டிருப்பதற்கு அநுபவத்தைவிட நிதர்சனம் வேறுவேண்டுவதில்லை.

கோபமென்பது ஒருவ்யாதியாக நினைக்கப்படுவதுமன்றி அதிலுங் கொடியதாகும்; ஏனெனில், அது தாழ்ந்தவர்களிடத்தில் மாத்ரம் வருகிறதேயல்லாமல் மேலானவர்களிடத்தில் வருவதில்லை. பொதுவான வ்யாதியினால் சரீரத்திற்குமாத்ரங் குறைவும் அசௌக்யமுமுண்டாகும். இந்தக்கோபமாகிய வ்யாதி சரீரம் மநஸு காரியமுதலிய எல்லாவற்றிற்கும் குறைவும் நாசமுமுண்டாக்குமென்பதினாலேதான்.

கோபத்தினால் அருந்தவம்புரிந்த முனிவர்கள் கூடத் தங்கள் தபோமஹிமையை யிழந்தார்களென்று புராணமுதலியவற்றில் வழங்கி வருவதைக் கியாபகத்தில் வைத்து அதற்கிடங்கொடாமல் நீக்கவேண்டும்.

ஒருவனது கோபஞ்செல்லத் தகுந்த தாழ்ந்தவனிடத்து அவன் கோபிக்காமலதை நீக்கவேண்டும்; தனதுகோபஞ் செல்லமாட்டாத மேலானவர்களிடத்தில் கோபித்தாலென்ன கோபிக்காமல் சாந்தமடைந்திருந்தா லென்ன?

தனக்கு மேலானவர்களிடத்துச் செய்யுங்கோபத்தால் தனக்கே துன்பம் நேரிடும், தாழ்ந்தவர்களிடத்துச் செய்யுங் கோபத்தால் பழியும் பாபமும் நேரிடும், ஆதலால் தாழ்ந்தவர்களிடத்திலாவது மேலானவர்களிடத்திலாவது கோபஞ்செய்யலாகாது.

மற்றும் மேலானவர், தாழ்ந்தவர், ஸரியானவர், ஆகிய மூவரிடத்திலும் கோபத்தை மறக்கவேண்டும். ஏனெனில், கோபத்தினாலே யாவர்க்கும் தீமைவிளைகின்றது.

துறந்தவர்களாகிய ஸந்யாஸிகட்குப் புறம்பான பகையொன்று மில்லே; ஆகிலும், கோபங்கொண்டவர்களானல் அது அவர்களுக்கு ள்ளாகவே ஶத்ருவாகத்தோன்றிநட்பு - தயை முதலானவைகளை நீக்கிப்பிறவித்துன்பக்கை யடைவிக்குமாதலால் அவர்களுக்குக் கோபத்தைக்காட்டிலும் வேறொருஶத்ருவில்லே.

தன்னைத் துன்பமணுகவொட்டாதபடி காக்க நினைக்கின்றவன் கோபமாகிய துன்பத்திற்கிடங்கொடாத படிக்குத் தக்க முயற்சிசெய்யவேண்டும். அப்படிச்செய்ய முயலாவிடின் அது அவனுடையப் ராணனை யிழக்கும்படிச்செய்யும்.

கோபத்திற்கிடங்கொடுக்கின்றவனிடத்துண்டாகிய கோபாக்னி அவனையு மவனுக்கு நல்லவழிகாட்டுகின்ற ஆசார்யனையுஞ்சுடும்; ஆதலால் கோபத்திற்கிடங்கொடுக்கலாகாது.

நிலத்தினிடத்துமோதி அறைந்தவனது கை தப்பாமல் நிலத்திற்பட்டு வருத்தமடைவதுபோல தன் வல்லமையைக் காண்பிப்பதற்குக் கோபத்தையே ஓராயுதமாகவெண்ணிக் கோபிக்கின்றவனது அறிவின்மை விபரீதத்தையுண்டாக்கி அவனடையவேண்டிய நற்பயன்களைத் தப்பாமலிழக்கச்செய்யும்.

ஜ்வாலைகளையுடைய அக்னியானது ஒன்றைச்சூழ்ந்து தஹிப்பதுபோல ஒருவன்மேன்மேலும் துன்பத்தைச்செய்வானகிலும் அவன்மேற் கோபிக்காமலிருப்பதற்குக் கூடுமானல் அதைவிடவுலகத்தில் நன்மை யொன்றுமில்லே.

கோபத்தைப்பற்றற வொழிப்பதற்கு அருள்நிறைந்த வுள்ளத்தோராக விருக்கவேண்டும். அவர்கள் இம்மை மறுமையிலுண்டாகிய ப்ரயோசனத்தை யொருமிக்கவடைவார்கள்.

மிகுதியாகக் கோபத்தையுடையவன் பிறப்பிறப்பென்னும் துன்பங்களிலிருந்து நீங்கமாட்டான். ஆகையால், அவனுயிருடனிருக்கினும் இறந்தவனுக்கு ஸமானமாவான். கோபத்தைப்பற்றறவிட்டவன் ஞானத்தால் மோக்ஷத்தை யடைவான். அவன் இறக்கத்தக்க ஶரீரத்தையுடையவனானலும் பிறப்பென்னும் துன்பத்தை விட்டவனாவான்.

ஆகலால் கோபமாகிய கொடியபழிக்கு எப்போது மஞ்சி நடக்கத்தக்க விவேகத்தை யுடைத்தாயிருக்கவேண்டும்.

---

## வஞ்சனை.

உற்றாரோடு வஞ்சகமாகப் பேசுகின்றவன் விஸ்வாஸகாதகனென்பதற்கு அனுமானிக்க வேண்டுவதில்லை.

பிறர்கற்ற கல்வியினிடத்துக் காரணமின்றிக் குற்றங்கூறுதலைத் தனக்கு மேன்மையாக நினைக்கின்றவஞ்சகன் கல்வியானாக விருந்தாலும் புத்திஹீநனாவான்.

தீமையை நினைப்பதிலுஞ் சொல்வதிலும் ஸந்தோஷத்தை யடைகின்ற வஞ்சகன் இம்மையில் நிந்தனையும் மறுமையில் நரகத்தையும் பெறுவதைவிட வேறொன்றும் பெறமாட்டான்.

ஒருவனுடைய ஸொத்தை வஞ்சகத்தால் அபஹரித்துக்கொண்டவன் த்ரவியஸஹாயத்தைக்கொண்டு இம்மையிலரசனுக்குத் தப்பித்துக்கொண்டாலும் மறுமையில் யமனுக்குத் தப்பித்துக் கொள்ளமாட்டான்.

சொல்லத்தகாதபொருளை வஞ்சனையாகக் கெடுதிசெய்ய விரும்பி வெளியிடுகிறவன் திருடாத்திருடனெனவும் பொய்யனெனவும் பெயர்பெறுவான்.

ஒருகாரியத்தையும் நிறைவேற்றிக்கொடுக்க ஸாமர்த்யமில்லாதவன் ஆசைவார்த்தையால் பிறரைமயக்கி யவர்களுடைய பொருளை யபஹரித்துக்கொண்டு பின்பவர்களிடத்தில் வீணாகவொரு குற்றத்தைச் சுமத்திப் பழிசுமிக்கின்ற வஞ்சகன் மீளாத துன்பத்தை யனுபவிப்பான்.

பிறருக்குக்கெடுதிசெய்ய முயல்கின்றவனுக் குதவிசெய்ய வுடன்படுகின்ற தாவ்பஸ்தன் தனதுபாக்ய முழுதும் வீணில் போக்கடித்துக்கொள்வதுமன்றி வஞ்சகனுக்கு ஸஹாயஞ்செய்த மஹாவஞ்சகனென்கிற பழிக்காளாவான்.

நடுவுநிலைமை யின்றிக் கெடுதிசெய்கின்றவனும் ஒருவன்பக்ஷமாக வழக்கோரஞ் சொல்கின்றவனும் ஆகிய இவர்களுடைய குடும்பம் நனைவினாலே உப்புப்போற்கெடுதி யடைவதுபோல நசித்துப்போகும்.

ஒருமையாகக் கூடியிருக்கும் ஸ்நேஹத்தைப் பிரிவுபடச்செய்கிற வஞ்சகன் உலகத்தில் துஷ்டனென விகழப்படுவது மல்லாமற் குண்டுணியெனவும் பெயர்பெறுவான்.

ஒருவனோடு ஒருமையாக நேசஞ்செய்து பின்பு அவனுடைய ஸொத்தை வஞ்சகஞ்செய்து அபஹரிக்கின்றவன் அருநரகுக்காளாவானென்பதற்கு ஐயப்படவேண்டியதில்லையென்று பலநூலிலுங் கூறப்பட்டிருக்கின்றது.

உலகத்தோரால் பழிக்கப்படுங் கார்யங்களை விடுவதற்கும் புகழப்படுங் கார்யங்களைச் செய்வதற்கும் தகுதியான வலிமைதெளிந்தோர்க்கேயல்லது மற்றவர்க்கில்லை; ஆதலாலப்படிக்கல்லாத வஞ்சகர்களை நம்பலாகாது: நம்பினால் தீங்குவிளையும்.

ஆதலால் வஞ்சனையாகிய தீங்குக் கிடங்கொடாது நீதியோடு வாழ்வதே ஸுகஜீவனமென்று நம்பவேண்டும்.

---

## கொலை.

வதைசெய்வதையே விளையாட்டாக வுடையவன் மறுமையில் நரகபாதையில் வருந்துவானெனப் பெரியோருரைத்திருப்பது மன்றி யிம்மையிலு மிரக்கமில்லாத கொலைபாதகனென்றுபெயர்பெறுவான்.

கொல்லுந்தொழிலில் இச்சைவைத்திருக்கின்ற கொடியபாவிகளைக்கண்டால் எல்லாவுயிரும் அஞ்சிநடுநடுங்குமென்பது முற்கூறப்பட்ட வாக்கியமேயாம்.

அரசன் ஸந்தோஷிக்கும்படி யுத்தகளத்தில் சத்ருக்களைக்கொன்று வெற்றிபெறுதலைக் கொலைசெய்வதென்றெண்ணவொண்ணாது; ஏனெனில், ஸமரக்களத்தில் அபஜயப்பட்டிறக்கின்றவர்களுக்கு வீரஸ்வர்க்கமுண்டென்று பலக்ரந்தங்களிலுஞ் சொல்லியிருப்பதினாலேதான்.

ஒருப்ராணி வதைப்படும்போது பார்க்கின்ற மற்றொருவன் அதை மறுக்காமல் சும்மாவிருப்பானாகில் கொலைபாதகனிலுங் கொடியவனென்று இகழப்படுவான்.

குற்றமற்ற வுயிர்களை யிரக்கமில்லாமற் கொல்லுகின்ற பாபியானவன் காட்டில்ஸஞ்சரிக்குந் துஷ்டமருகங்களுக்கு மதிககொடியவனாக வெண்ணப்படுவான்.

அரசனானவன் துஷ்டனைக் கண்டுகொண்டு அவரவர்களுக்குத் தகுதியான தண்டனைசெய்வதில் நேரிடும் கொலையானது கொலைபாதகமென நினைக்கப்படாது; ஏனெனில், துஷ்டநிக்ரஹமும் ஶிஷ்டபரிபாலனமும் இராசர்களுக்குரிய தர்மங்களானமையினாலே தான்.

மாம்ஸபக்ஷணஞ்செய்கிற வ்யாஜத்தினாலாகிலும் ஜீவவதை செய்ய மனந்துணியாதவர்களை யாவருங் கைகூப்பித் தொழவேண்டுமென முன்னோருரைத்தனர்.

பஶுபந்தனமுதலிய யாகஞ்செய்வதிலும் தேவதா ப்ரார்த்தனை செய்வதிலும் ஜீவவதைசெய்வது கொலைபாதகமல்லவென்று ஶ்ருதிகளிற் சொல்லப்பட்டிருந்தாலும் அவைகளைக்கூட இக்காலத்து வேதியரில் பலரும் நிஷேதித்திருக்கிறபடியால் அவர்கள் கொலைபாதகத்துக்கஞ்சின புண்யபுருஷரெனப் படுவார்கள்.

ஜீவவதைக் கிடங்கொடாமலிருப்பதே பரமதர்மமென வடநூலோருமுரைத்திருக்கிறார்கள்.

ஆகலால் பஞ்சமஹாபாதகங்களிலொன்றாகிய கொலைபாதகத்தைக் கனவிலுங் கைக்கொள்ளலாகாது.

---

## அருள்.

அருளென்பது தயை; அதுவே இரக்கமென்றும் க்ருபையென்றும் அன்பென்றும் சொல்லப்படும்; இவையில்லாமலுலகமில்லை; பகவான் தமக்குள்ள அருளினாலேயே உலகத்தையும் அதிலுள்ள சராசரங்களையும் படைத்துப் பாதுகாத்துரக்ஷிக்கின்றார். அரசர்களுமப்படியே ப்ரஜைகளைக் காப்பாற்றுகிறார்கள். மாதாபிதாக்களும் அந்தக்குணங்களைக்கொண்டே மக்களைரக்ஷித்து வளர்க்கிறார்கள். இத்தன்மை

பக்ஷிம்ருகங்கள் முதலான ஸகலஜந்துக்களுக்கு முண்டு. ஆதலால் தயையில்லாதவன் நமனிலுங்கொடியவனாவான்.

இரக்கமில்லாத கல்மனஸையுடையவர்கள் மேன்மக்களானாலுங்கீழ்மக்களாக நினைக்கப்படுவார்கள்.

தம்முயிர்போல் எல்லாவுயிரையும் நினைக்கின்றவர் அருளுடையவர்களென்று சொல்லப்படுவார்.

அன்புள்ள பெரியோர்களாலே அன்புடையவனெனச் சொல்லும்படி நடந்துகொள்ளலல்லவோ புத்திக்கழகு.

அருளும் தாரதம்ய விவேகமும் இல்லாத ஒருத்ரவ்யவானிடத்தில் அடுப்பதைப்பார்க்கிலும் அக்குணங்களையுடைய ஒருவறியவனையடுத்தால் வீணாகாது.

விவேகமுள்ள சிறுவர்களைக்கண்ட பெரியோர்கள் அன்புடன் அவர்களை நெருங்கி வசனித்து ஆசீர்வதிப்பார்கள்; ஆதலால் பெரியோரை வணங்கி நடக்கவேண்டியது சிறுவர்க்கழகாம்.

தீயசொற்களா லிகழும்பகைவர்களிடத்தும் கோபிக்காமல் பொறுமையோடு சிந்தித்து இரங்குவது பெரியோர்களுக்குக் கடமையாம்; ஆதலால் அருளோடு பொறுமைகொண்டிருத்தல் மிகுந்தபெருமையயக்கும்.

ஆதலால் மனிதனுக்கு அருளும் அன்பும் உண்டாயிருக்கவேண்டுமென்பது சொல்லவேண்டிய விஷயமேயல்ல. இது வலியவர்க்கும் எளியவரிடத்தி லுண்டாயிருக்கவேண்டிய தன்மையென்றறிக. இஃதில்லாத புருஷனுக் குயிரிருந்தாலும் அவன் உயிர்ப்பிணமென்றே சொல்லப்படுவான்.

பசியினாலுடம்பு மெலிந்துயிரை யிழக்கும்படி நேரிட்டாலும் பொறுமையையும் மனவுறுதியையுங் கைசோரவிடலாகாது.

ஆதலால் அருளென்னுங் குணத்தைத் தன்னுயிர்போலக் காக்கவேண்டும்.

## முயற்சி.

விதிப்படி நடக்குமென்றெண்ணி யாதொருகார்யத்திலும் முயற்சிசெய்யாமலிருத்தலே வறுமையை யடைதற்கு முக்யகாரணமாம்.

ஸாக்யப்படாத பொருளையடைய முயல்கின்றவன் மேன்மையையுடைவனாயினும் பேயர்களில் முந்தினவனாகக் காணப்படுவான்.

யாதொருகார்யத்திலிடத்துஞ் சோம்பலின்றித் தக்க முயற்சி செய்பவனை வறுமைநெருங்குதற்கஞ்சும்; ஆதலால் சோம்பலுக்கிடங்கொடாது முயற்சிசெய்யவேண்டும்.

மேலாகிய வ்ரதங்களை யிடையூறின்றி நடத்த முயல்கின்றவன் சிறியவனாக விருக்கினும் தபஸியெனப் பெயர்பெறுவான்.

பயிர் என்பது பயிற்சி—முயற்சி யெனவுங்கொள்ளப்படும். ஆதலால் பயிர்செய்வதிலியற்றப்படும் முயற்சியே செல்வப்பேற்றுக்கு முதற்குறியாம்.

உழவு முதலியவைகளில் வருத்தமுற்று இட்டபயிர்பலனைக்கொடுக்குங்காலத்தில் சோம்பலால் தக்கபடி நடத்தவறியாதவன் தரித்ரத்தையடைவான்.

எல்லாக்கார்யங்களுக்கும் அவைகளாலடையும் பயனுக்கும் தெய்வகாரணத்தைப்பார்க்கிலும் புருஷகாரணமே மேலானதாகும்; எப்படியெனில், ஒற்றைத்தேருருளையால் ரதம் நடவாத்தன்மைபோற் புருஷகாரமில்லாமல் தெய்வஸங்கல்பத்தினு லொன்று முடியாது.

எள்ளும் அதற்குள் எண்ணெயும் பகவானாலுண்டாக்கப்பட்டிருந்தாலும் புருஷகாரமென்கிற முயற்சியினாலல்லாமல் எண்ணெய் வெளிப்படுவதில்லையே ஆதலால் முயற்சியின்றி ஒன்றும் நிறைவேறாது; அஃதில்லாமற் சோம்பலுற்றவன் பயன்படான்.

முயற்சியில்லாவிடின் கல்வியில்லை; கல்வியில்லாவிடின் புத்தியுமில்லை, பராக்ரமுமில்லை; இவைகளில்லாவிடின் பொருளுமில்லை பெருமையுமில்லை; சிலவேளை பொருள்மாத்ர மிருந்தாலும் பயன்படாது; ஆதலால் முயற்சியில்லாவிடி னொன்றுமில்லை யென்பதற்கு அனுமானிக்கவேண்டுவதில்லை.

முயற்சியுள்ள புருஷஸிம்ஹத்தையே மஹாலக்ஷ்மி யடைகிறாள்; தெய்வத்தினால் பாக்யங் கொடுபடவேண்டுமென்று ஆலஸ்யமாகிய சோம்பலும் அவிவேகமாகிய தெரியாமையுமுள்ள புருஷர், நினைக்கிறார்கள்; ஆகையால், தெய்வத்தினிடத்தில் நம்பிக்கையை விட்டு ஸொந்த ஶக்தியினாலே முயற்சிசெய்தும் ஒருவேளைகார்யம் ஸாதிக்கப்படாமற்போனால் குற்றமென்ன வென்று ஒருவித்வானுரைத்திருக்கிறார் அதையோசித்தால் எளிதில் தெரிந்துகொள்ளலாகும்.

தெய்வத்தால்யாவும் நடக்குமென்று முயற்சியைக் கைவிட்டவன் கெட்டுப்போவான்; புருஷகாரமில்லாமல் தெய்வம்ஸித்திக்கிறதில்லை யென்பதை யறிந்தவனே புத்திமான்.

பலவற்றிலுஞ் சென்றுழன்றலைகின்ற மனஸை விவேகத்தால் தடுத்து நிலைக்கச்செய்வதே மோக்ஷத்திற்கு முக்யகாரணமான முயற்சியாம்.

கஷ்டதசையிலிருக்கும் ஒருவன் அக்கஷ்டத்தைப் பாராட்டாமல் ப்ரயோசனத்தைக் கொடுக்குந் தொழிலின்னதென்றும் அதனிடத்து மனஸைச்செலுத்தி முயற்சிசெய்தால் ப்ரயோசனத்தை யடையலாகுமென்றும் புத்திகூர்மையால் பகுத்தறிந்து நடப்பானாகில் அவனுக்குச்செல்வமும் பெருமையும் ஏன் உண்டாகாமற்போகும்? உண்டாவதுஸித்தமே.

செய்யத்தக்ககார்ய மின்னதென்றும் அதனிடத்து புத்தியைச் செலுத்தி முயற்சிசெய்தால் பலனுண்டாகுமென்றும். தெரிந்திருந்தும் சோம்பலால் அதைக்குறித்து முயற்சிசெய்யாமல் தரித்ரத்தால் வருந்துவோன் கல்வியிற்சிறந்தவனாக விருந்தாலும் அவனை அப்ரயோசகனென்று உலகம்பழிக்கும். இவ்விதப்பழிப்புக் காளாவதைவிட இறத்தல் நலமாகவிருக்கும்.

பிறருக்குபகாரஞ் செய்வதினிடத்து புத்தியைச் சோரவிடாமலிருப்பவன் பலநன்மைக்கும் ஆதாரமாகிய முயற்சியினிடத்து சிந்தையுடையவனாக விருப்பான்.

முயற்சிசெய்வதில் ஶ்ரத்தையில்லாதவன் பரோபகாரஞ்செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தைமாத்ரங் கொண்டிருந்தால் அவ்வெண்ணம் முடிவுபெறாது.

எளிதில்பெறத்தக்க பலநன்மைகள் தனக்கெதிராக விருந்தும் முயற்சியின்மையால் சோம்பலுற்று அவைகளைப்பெறுமல் விட்டுவிடுகிறவன் யாதொருபயனும் அடையமாட்டான். அஃதெவ்வாறெனின், எல்லாவுயிரையும் வதைப்பதற்குக் காரணமாகிய கூர்மையுடைய வாளாயுதம் பேடிகையில் விளங்கிக்கொண்டிருந்தால் அதனுல் யாது பயன்.

உபகாரிகளாக விருக்கின்ற நல்லோர்கள் தங்களுடைய ஸௌக்யத்தை விரும்பாமலே ஓர்காரியத்தில் ப்ரவேசித்து அதனுலாகிய த்ரவிய ஸம்பாதனையைத் தன்சுற்றத்தார் நட்பினர் முதலாகியவர்களுக்குண்டாகிய துன்பங்களைமாற்ற உபயோகப்படுத்தி அவர்களுக்கு ஸௌக்யத்தை யுண்டாக்குவார்களென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அஃதெவ்வாறெனின், மாளிகைமுதலாகிய வீடுகளிலுலேதூண்களுக்கு யாதொரு நன்மையுமில்லாதிருந்தாலும் அத்தூண்கள்தங்கள் வருத்தத்தை நினையாமலே அம்மாளிகையைத் தாங்கிக்காப்பாற்றுவது போலவாம். ஆதலால் இவர்களைத் தாங்குவோரென்றுநாயனுருஞ்சொல்லி யிருக்கிறார்.

முயற்சியினிடத்து மனத்தளர்ச்சியில்லாதவனுக்குச் செல்வம் வளர்ந்தேறுமென்றும், அம்முயற்சியில் மனவூக்கமில்லாதவனிடத்து வறுமை நிரந்தரங் குடிகொண்டிருக்குமென்றும் சொல்லப்படும். இந்தநீதியையறிந்து நடக்கின்றவனுக்கு எல்லாநன்மையும் எளிதில் வந்து கைகூடும்.

மூதேவி சோம்பலையுடையவனிடத்து வாஸஞ்செய்துகொண்டிருப்பாளென்றும், சோம்பலையகற்றி நன்முயற்சிசெய்பவனிடத்து ஸ்ரீதேவி நர்த்தனஞ் செய்துகொண்டிருப்பாளென்றும் முன்னோர்கள் சொல்லிய நீதிவாக்யம இப்போது அனுபவத்திற்கும் ஸரியாகவிருப்பதால் யாவரும் முயற்சிசெய்வதில் ஶ்ரத்தையுடையவர்களாக விருக்கவேண்டும்.

ஒருதொழிலினிடத்து முயற்சிசெய்தும் ஊழினுலாகிலும் தெரியாத மற்றகாரணத்தினுலாகிலும் பலன்கிடையாமற் போனுல் குற்றமொன்றுமில்லை; இதற்காக உலகம்பழியாது. ஆனுல் விதியில்லையென்று முயற்சியைக்கைவிட்டுச் சோம்பலுற்றவனை உலகம்பழிக்கும்.

ஊழினாலே ஒன்றுமடைவகற்கிடமில்லாகிருந்தாலும் மனவுறுதியுடையவன் தனது நன்முயற்சியால் அவ்வூழையுங்கடந்து நடப்பானென்று அறிவுடையோர் சொல்லியிருப்பதற்கு நிதர்சனமென்னவெனில், பதினாறுவயதிற் கதிகமில்லாத மார்க்கண்டேயன் தன்னுடைய மனவூக்கத்தின் முயற்சியால் என்றும் பதினாறு வயஸ்ஸையுடையவனாக விருந்தானென்கிற ப்ரமாணமிருக்க வில்லையா?

ஒருகார்யத்தை முயன்று நடத்திவரும்போது அதற்குப் பல விகாதங்கள் மேன்மேலும் வருமாயினும், அவைகளுக்கு இடங்கொடாமலும் மனங்கலங்காமலும் தான்தொடங்கிய கார்யத்திற்கு பங்கம் வராமல் நிறைவேற்றுகிறவனுக்கு ஸமானம் உலகத்திலொருவனுமாக மாட்டான்.

கரைபுரண்ட வெள்ளம்போல் பலதுன்பம்வந்தாலும் அவற்றை உள்ளத்தில் உன்னிப்பார்த்து மனமகிழ்ச்சி கொண்டிருப்பவனுக்கு அத்துன்பம் ஊழினாலே வந்ததானாலு முடனே கெடுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

உளையிலழுந்திய வண்டியிலேக் கடா தன்வருத்தத்தைப் பாராட்டாமல் மாருரங்கொண் டிழுப்பதுபோல நன்முயற்சியில் புத்தியுடையவன் தான் நடத்துங்கார்யத்திற் கிடையூறுவருமாகில் தன்னுடல் வருத்தத்தைப்பாராட்டாமல் கூடியமுயற்சிசெய்து நிறைவேற்றுவான். இவ்வகையோருக்குப் பலதுன்ப முண்டாயிருந்தாலும் அவை யுடனே அவர்களைவிட்டு நீங்கிப்போய்விடும்.

ஆகலால், உயிர்க்குத்துணைக் காரணமாக விருக்கும் முயற்சியினிடத்தில் மனத்தளர்ச்சி செய்யாமல் ஜாக்ரதையா யிருக்கவேண்டும்.

---

## நட்பாராய்தல்.

ஒருவனுடைய குணங்களையும் நடக்கைகளையும் சோதித்றிகந்து பின்பு ஸ்நேஹஞ்செய்யவேண்டும், அப்படிச் செய்யாமல் அயோக்யனிடத்து நட்புக்கொண்டால் அவன்செய்யும் பழிபாவங்களுக்குத் தானுந் துணையாகித் துன்பப்படுவதுமல்லாமல், இஹபரங்களில் தான்பெறத்தக்க பலன்கள் யாவையு மிழைந்துவிடுவான்.

ஒருவன் மற்றொருவனுடனே ஸ்நேஹஞ்செய்ய விரும்பினால் முன்னமே அவனுடைய பிறப்பையும் சுற்றத்தையும் ஸ்நேஹர்களையும் அறிந்து அதனால் அவனது குணம் இப்படிக்கொத்ததென்று நிதானித்துப் பின்பு அவனுடனே ஸ்நேஹஞ்செய்யவேண்டும்.

நல்லகுலத்திற் பிறந்தவனையும் உலகத்தார் சொல்லும் பழிக்கும் பாபத்திற்குமஞ்சி நடக்கின்றவனையும் இருக்கின்றவனது நட்பைப் பொருள்கொடுத்தாவது வாங்கவேண்டும். ஏனெனில், தனக்குள்ள பகைவர்களுக்கு நல்லோருடைய ஸ்நேஹம் காவலாகவிருக்குமென்பதினாலேதான். குற்றமுள்ளவர்களுடைய ஸ்நேஹமோவெனில், தீமையைத்தருமாதலாலதற்கொன்றைக் கொடுத்தாவது விட்டுவிடவேண்டியது.

தான்செய்த கெடுதிகளைக்குறித்து கண்டித்து இனி அப்படிச் செய்யாமலிருக்கும்படியாக நன்மார்க்கத்தைத் தெரிவிக்கும் வல்லமையுடைய விவேகிகளை முன்னாடி ஆராய்ந்தறிந்து பின்பு ஸ்நேஹிக்கவேண்டும். அப்படி அறிந்து ஸ்நேஹஞ்செய்வதினாலே மேன்மையுண்டாகும்.

அவிவேகியோடு மனங்கலந்து உறவாடுவதைப்பார்க்கிலும் விவேகியோடு பகைசெய்துகொண்டிருப்பது நலம். ஏனெனில், அவிவேகியினுடைய உறவு ஆபத்தானகாலத்தில் பகையைவிளைக்குமென்றும், விவேகியினுடையபகை எத்தனைகொடியதாக விருந்தாலும் துன்பமுண்டாக்க மாட்டாதென்றும், முன்னோர்கள் சொல்லியிருப்பதினாலேதான்.

வறுமையுற்ற காலத்தில் கைவிடும் ஸ்நேஹருடனே உறவாடுவது எத்தன்மையதென்னில் மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கிய தன்மைபோலவாம் ஆதலால் இவ்வித அறிவிலாருடனே ஸ்நேஹங்கொள்ளாமல் மௌனமாக விருத்தலே பெரியசெல்வமென்று நீதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஶாஸ்த்ரங்களில் சொல்லிய விதியையும் விலக்கையும் புத்திகூர்மையாலறிந்து நடக்கின்ற புலமையோர்களைக் கண்டு அவர்களோடு நட்புக்கொண்டால் புகழுங்கீர்த்தியுமுண்டாகும்.

இழிகுலத்தோர் ஹீனத்தொழிலோர் இழிவானநடையுளோர் இப்படிக்கொத்த தாழ்வினரோடு பழகுதலால் கெடுதிவரா விடினும் பெருமை குறைந்துவிடும்.

உத்தமனுடைய ஸ்நேஹம் துவக்கத்தில் சிறியதாகவிருந்தாலும் பின்பு மேன்மேலும் வ்ருத்தியாகும்; மத்யமனுடைய ஸ்நேஹம் அதிகமாக வ்ருத்தியடையாமற் போனபோதிலும் ததுதியாகவிருக்கும், அதமனுடைய ஸ்நேஹம் நிலையாகவிராமல் வரவரத் தேய்பிறைபோல் குறைந்துபோகும்; அதமாதமனுடைய ஸ்நேஹமோவெனில் குறைவதுமன்றிப் பகையாகமாறித்தீங்கு பயக்குமாதலால் ஒருவனை ஸ்நேஹஞ் செய்வதற்குமுன் அவனுடைய குறைகுணங்களையறிந்து பின்பு நட்புக்கொள்ளவேண்டும்.

கரும்பைக் கொழுந்தாடையிலிருந்து தின்றுகொண்டுபோனாலது வரவர மதுரத்தை யதிகமாகக் கொடுக்கும்; அதுபோல அறிவுடன் நூல்களைக்கற்றறிந்த விவேகிகளோடுகொண்ட வுறவு ஆரம்பத்தில் மனவிற்குவெறுப்பாயிருப்பினும், பழகப்பழக வ்ருத்தியாகி இனிமைதரும். அக்கரும்பை அடியிலிருந்துதின்று கொண்டுபோனால் அதன்சுவைவரவரகுறைந்துகாணும். அதுபோல நன்மையில்லாத தீயோரோடுகொண்ட உறவு முதலில் அதிக இஷ்டத்தைத் தருமாயினும் வரவரக்குறைவதுமல்லாமல் தீதையுண்டாக்கும்; இதையுணர்ந்து யுக்தமானஸ்நேஹத்தைத் தேடவேண்டும்.

யானையினது ஸ்வபாவத்தைப்போன்ற விலைமாதருடனே கொள்ளும் நட்பைவிட்டு ஶுநகத்தின் ஹ்ருதயத்தைப்போன்ற மனமுள்ள நல்லவர்களிடத்திலுறவுசெய்யவேண்டும். அஃதெவ்வாறெனின், யானை தனக்குக் கவளங்கொடுத்து ஸம்ரக்ஷணை செய்தபாகனையும் ஒருகாலத்தில் கொன்றுவிடும். அதுபோல விலைமாதருக்கு மனவெறுப்பில்லாமல் மேன்மேலும் த்ரவ்யத்தைக்கொடுத்துக்கொண்டு வந்தாலும் அவர்கள் நன்றிபாராட்டாமல் ஸமயத்தில் துன்பத்தை விளைவிப்பார்கள். ஆதலா லிவ்விதநடக்கையுள்ளவர்கள் தீயோரென்று சொல்லப்படுவார்கள். ஶுநகத்தை வளர்க்கின்றவன் அதனிடத்து எறிந்த வேலாயுதம் அதன்மீது பட்டுருவித்தொங்கிக்கொண்டிருந்தாலும் அது தன் வருத்தத்தை நினையாமல் வாலைக்குழைத்துக்கொண்டு யஜமா

ணன் ஸமீபத்தில் வருமேயல்லது தனக்குண்டாகிய வருத்தத்தால் மேல்விழுந்து கவ்வாது. இதுபோல நல்லோர்களுக்குக் கொடிதாகிய பிழையைச்செய்தாலும் அவர்கள் கோபங்கொள்ளாமல் முன்பழக்கத்தாலுண்டாகிய விஸ்வாஸத்தைப் பாராட்டி நட்பாகவே நடப்பார்கள். ஆதலால் நல்லோர்களுடைய ஸ்நேஹத்தையே விரும்பவேண்டும்.

தலையான ஸ்நேஹம் பனைபோலவும், இடையானஸ்நேஹம் தெங்குபோலவும், கடையானஸ்நேஹம் கமுகுபோலவு மிருக்குமென்பதற்குப் பொருளென்னவெனில், பனை முயற்சியில்லாமலே பலனையளிப்பதுபோல உத்தமர்கள் ஒருநாள்கண்டு வசனித்தாலு மதைப்பழமையாக எண்ணிப் பலநன்மைகளைச் செய்வார்களென்பதும், தெங்கு சிலகாலம் ஜலம்விட்டுக் காப்பாற்றப்பட்ட பின்பு பலனைத்தருவதுபோல மத்யமர்களுடனே சிலநாள் பழகினாலல்லது அவர்களுடைய ஸ்நேஹம் ஊர்ஜிதப்படாதென்பதும், எக்காலமும் குறைவில்லாமல் ஜலம்விட்டுக் காப்பாற்றிவந்தால் ப்ரயோஜனத்தை யளிப்பதும், ஒருநாள் ஜலம் குறைவுபட்டால் பலத்தைத்தராததுமான கமுகுபோல அதமர்களுடைய பழக்கம் ஒருநாளிடைவிட்டாலும் பயன்படாதென்பதுந்தான்.

ஈயினது காலளவுகூட உதவிசெய்யாத ஒருவன் நாயினது கால்விரல்களைப்போல நெருக்கமுற்ற ஸ்நேஹனாகவிருந்தாலும் அவனாலொருபலனு முண்டாகாது. ஆகலால், அந்த ஸ்நேஹநெருக்கத்தை உதறிவிட்டுப் பண்புடையவர்கள் எவ்வளவுதூரத்தி லிருந்தாலும் அவர்களைப்போய் அடுத்தால் பலனுண்டாகும்; இதற்கு த்ருஷ்டாந்தமென்னவெனில், புலத்தினாலே கால்வாய்க்கு ஒருபலனுமில்லாதிருந்தாலும அது தூரத்திலிருக்கும் ஜலத்தைத் தன்வழியாய்க் கொண்டுவந்து அந்தப்புலத்திற் சேர்த்து அதை விளைவிக்கும்படி செய்வதுகாண். இதுபோல நல்லோர்களும் உபகாரத்தை விரும்பாமலே நன்மை செய்வார்கள்.

விவேகிகளோடு கலந்துறவாடுவதே ஒருவனுக்கு உறுதியானபலன்; அப்படியல்லாது அவிவேகிகளோடு உறவாடுவது எத்தன்மையதென்னில் பாம்புக்குப் பாலூட்டிவளர்த்து ஸ்நேஹம் பாராட்டிக்

கொண்டுவந்தாலும் அநுவிஷத்தைக் கொடுக்கும் தன் ஸ்வபாவகுண த்தைவிடாது. இதுபோலவே தீயோருடைய நட்பு தீமைபயக்கா மற் போகாது.

உலகத்திலுள்ள யாவரிடத்தும் உறவாயும் ஹிதமாயும் நடக்கின் ற நல்லோர்கள் பிறருக்குத் துன்பம் நேரிட்டகாலத்தில் அது தமக்கு நேரிட்டதாகக்கருதி அதற்குத்தம்மால்கூடிய உபகாரத்தை மனவஞ் சனையில்லாமற் செய்வார்கள். இத்தன்மையுடையோருக்குப்பிறர் எ த்தனையாகக்குற்றஞ் செய்தாலும் அதைத் தங்கைவிரல் தங்கண்ணில் பட்டதுபோல எண்ணுவார்களே யல்லாமல் குற்றமாக எண்ணார்கள்.

தர்மத்தின் வழியை யறியவும், குற்றங்களுக்குஞ்சி நடக்கவும் கடின்வசனத்திற்குக் கோபியாமல் பொறுமைகொண் டிருக்கவும், கபடமானசொற்களால் மோசஞ்செய்யா திருக்கவும், தீவினையைக் கொடுக்கின்றவர்களுடைய இணக்கத்தை மறந்துவிடவும், நினைக்கின் றவர்கள் யாரோ அவர்களே பெரியோர்களுடைய சொற்களைக்கேட் டு அவர்களோடு நட்புக்கொள்ள விரும்பியவர்கள்.

பாலுடனே கூடியஜலத்தை நாமறிந்திருந்து மதைப்பிரிப்பது நம்மால் கூடாததுபோல, நல்லவர்களுடனே நட்புக்கொண்ட சிறிய வர்களுடைய அல்பகுணம் வெளிப்படாது.

கடலினிடமாய் ஓடுகின்ற கப்பல்தீதாகிய சுழல்காற்றினுறவால் கெடுதியடையும், இதுபோல நற்குணத்தையுடைய பால்யன் தீங்கான சிற்றினஞ் சேருவானுகில் கெடுதியடைவன்.

ஆதலால் ஒருவனை நட்புக்கொள்ள விரும்பியவர்கள் முன்னடி அவர்களுடைய குணகுணங்களை ஆராய்ந்து பின்பு நட்புக்கொள்ள வேண்டும்.

---

## நட்பில்பிழைபொறுத்தல்.

உறவுகொண்ட ஒருவன் பொல்லாங்கான கார்யத்தைச்செய்து விடுவானுகிலது அவனையல்லாமல் நேரிட்ட குற்றமென்று எண்ணி அதைக்குறித்து வருந்தாமல் பொறுத்துக்கொள்வோர் நல்லோர் என் பது நட்பில் பிழைபொறுத்தலாம்.

ஒருவனை நல்லகுணவானென்று நினைத்து விரும்பி நட்புக்கொண்டபின்பு அவனிடத்து ஒருபண்பாயினு மில்லாதிருந்தாலும் ஒருதரம் நட்புக்கொண்டபடியினாலே அவனை கனப்படுத்தித்தமக்குச்சார்பாகக்கொள்ளவேண்டியதேயல்லாமல் அவனது அறியாமையை வெளியிட்டுப் பேசலாகாது. அஃதெப்படியெனில், நெல்உமியையும் நீர்நுரையையும் புஷ்பம்புல்லிதழையும் தந்தம்நற்குணத்தால் தழுவிக்கொண்டிருப்பது போலவாம்.

அணையினாலே கட்டப்பட்டிருக்கும் ஜலம் அவ்வணையை உடைத்துக்கொண்டு போய்விடுமாகில் அதற்காக ஜனங்கள் அதனிடத்துப்பிணங்கிக்கொண் டிருப்பார்களோ? இரார்கள்; ஏனெனில், அந்தஜலம் ஸகலப்ராணிகளுக்கும் ஜீவாதாரமாயிருக்கிறபடியினாலே அதைப்போகவொட்டாமல் மறுபடி அணைபோட்டுக் கட்டிக்கொள்வார்களல்லவோ? அதுபோலவே ஒருவனைவருந்தி நட்புக்கொண்டபின்பு அவன் வெறுக்கும்படியாய்ப் பேசினாலும் பொறுத்துக்கொள்ள வேண்டியதே நட்பாளருக்குக் கடமையாம்.

நட்புக்கொண்ட ஒருவன் பொறுக்கத்தகாத ஒருகொடிய பொல்லாங்கைச் செய்தாலும் ஒருகால் நட்புகொண்டபடியா லதைநாடிப் பொறுக்கவேண்டும். இல்லாவிடில் நட்பு நீடித்திருப்பது கடினம்.

ஒருவன் தனக்குப் பொல்லாங்கு செய்வோனை ஸ்நேஹனாக வுடைத்தாயிருந்தால் அவன் செய்த பொல்லாங்கைப் பொறுத்துத் தனக்குள்ளே யடக்கிக்கொள்ள வேண்டுமேயல்லது அதற்காக அவனை விட்டுவிடலாகாது; எப்படியெனில், எல்லாப்பொருள்களையும் பஸ்மமாக்கும் அக்னியைக்கூட அதன் ஜ்வாலையை மிதப்படுத்தி ஜனங்கள் தங்கள்வீட்டிக்குள் ளடக்கிவைத்துக்கொள்ளுந்தன்மைபோலேதான்.

ஒருவன் தன்கைவிரல் தன்கண்ணிற்பட்டதென்று அதைத் தறித்துவிடுவானோ? அதுபோல ஒருவனும் தன்னிடத்தில் நட்புக்கொண்டவர்கள் பொல்லாங்கான கார்யத்தைச் செய்தானென்று அவர்களை விட்டுவிட்டலாகாது. விட்டுவிட்டால் உலகம் பழிக்கும். இதற்கு ப்ரமாணம், "கூடிப்பிரியேல்" என்று ஒளவை சொல்லிய நீதியைவிட வேறுவேண்டுமோ?

நல்லவர்களையே நல்லவர்கள் ஸ்நேஹிக்க வுடன்படுவார்கள். அப்படி ஸ்நேஹித்தபின்பு காலதேசவர்த்தமானத்தா லவர்களால் தமக்குப் பொல்லாங்கு நேரிடுமாகி லதைத்தமக்குள்ளே யடக்கிக்கொள்வார்களே யல்லாமல் வெளியிட்டுப் பேசார்கள். ஒருவேளை தப்பி வெளியிட்டுப் பேசுவார்களாகில் அவர்களுங் குற்றமுள்ளவராவார்கள். ஆதலாலதை மறந்துவிடவேண்டும்.

தன்னாலே காதலிக்கப்பட்டவர்கள்செய்தகார்யம் ப்ராணனுக்கு அபாயத்தைக் கொண்டுவரும்படியானதாக விருந்தாலும் அதைப்பொறுத்துக்கொண்டு அவர்கள்செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும். மன்னியாமல் அதை வெளியிட்டால் அச்சேர்க்கைவாஸனை தன்னையுந் தொடர்ந்து தீவினைசெய்யுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஆதலால் ஸுகந்தமுள்ள புஷ்பத்தோடுகூடிய இழிவான நாரையும் பெரியோர்க ளங்கீகரிப்பதுபோல நட்பையுடையவர்களா லுண்டாகிய குற்றங்களையும் நட்பாளர் பொறுத்துக்கொள்ளவேண்டும்.

---

## தீநட்பு.

ஒருவனுக்கு வறுமைவந்தகாலத்தில் ஸ்நேஹத்தை மறந்து செல்வம்வந்தபொழுது பழமைபாராட்டி உறவுசெய்கின்றவர்கள் முகநட்பாளரேயல்லது ஒருமையானவர்களல்லர்—அவர்களை ஒருமையுள்ளவர்களென்று நம்பினால் தீங்குவிளையும்.

குணமில்லாதவர்களுடைய நட்புக் கொருவரு மிடங்கொடுக்கலாகாது ஒருவேளை அகஸ்மாத்தாய் அப்படிக்கொத்த நட்பு நேரிட்டு வ்ருத்தியாகுமாகில் அதனாலே அவர்கள்செய்யும் கொடுமைக்குத் தாமுமுட்பட்டு ஆபத்தாகிய துன்பத்தை யடையவேண்டும். ஆதலால் தீநட்புக்கிடங்கொடுக்கலாகாது.

ஸஜ்ஜனராகிய நல்லோருக்குத் தீயோருடைய ஸஹவாஸம் பொருந்தாது, ஒருவேளை அபூர்வமாக நேரிட்டிருந்தாலும் அதனால் தீங்குண்டாகுமென்கிற அச்சத்தால் அவர்கள் பிள்ளைப்பூச்சிபோல ஒட்டியு மொட்டாமலுமிருந்து நீங்கிவிடுவார்கள்.

நல்லோர்களுடைய நட்புக் பலநன்மையைக் கொடுக்குமென்பதை யுணராத தீயோர் அவர்களோடு ஏன் நட்புக்கொள்ள விரும்புகிறார்களென்றால், அவர்களுக்கு அறிவுசோர்வுபடுங் காலத்தில் அவர்களுடையபொருளை அபஹரிப்பதற்குத்தான்.

பிறனாலே பலதரம் பலநன்மைகளைப்பெற்று அதைமறந்து அவனுக்கு நேரிட்ட துன்பத்திற்குத் தானுந் துணைப்படாமல் கெடுதி செய்வோன், தீநட்பாளரில் தலைமையானவனென்று சொல்லப்படுவான்.

அறிவுடையவன் ஒருவனிடத்துப் பகையைமேற்கொண்டிருந்தாலும் அவனுக்கு ஆபத்துவந்தவிடத்து உதவியைச் செய்வானேயல்லது கெடுதியைச் செய்ய பாத்யப்படான்; அறிவிலானேவெனில் மிகுதியானபலனை ஒருவனாலே யடைந்திருந்து மதை நினையாமல் அபகாரத்தைச்செய்ய உடன்படுவான்; ஆதலால் அறிவிலாருடைய உறவைப்பார்க்கிலும் அறிவுடையவரது பகையினால் பலனுண்டென்று சொல்லப்படுகின்றது.

மிகுந்த ஸ்நேஹநெருக்கத்தினாலே பேதமின்றி விரும்பிக்கேட்குங் கார்யத்தை எளிதில் நிறைவேற்றிக்கொடுக்க இடமுண்டாயிருந்தாலும் த்ரவ்யாஶையால் அதை மற்றொருவனுக்கு அனுகூலப்படுத்திக் கொடுப்போன் பொருத்தமுள்ள ஸ்நேஹனாக விருந்தபோதிலும் அவன் ஸ்நேஹத்தை அப்பொழுதேவிட்டு நீங்கியிருக்கவேண்டியதே தர்மமென்று சொல்லியிருக்கின்றது.

தொழில்செய்வதினிடத்துப் பகையாகவும் வசனிப்பதினிடத்து நட்பாகவுமிருக்கின்றவனது நட்பு நினைவிலேமாத்ரமல்ல கனவிலுந் துன்பஞ்செய்யுமென்பதற்கு ஐயப்படவேண்டியதில்லை.

தனித்த விடத்தில் மேல்வீழ்ந்துறவாடிப் பலர்கூடிய ஸபையினிடத்தில் உரிமையில்லாத அன்யனைப்போலக் குறிப்பித்துக்கொண்டிருப்போனது நட்பை (பிணிக்குமருந்தூட்டி நிவர்த்திசெய்வதுபோல) நிவர்த்திசெய்து விடவேண்டியது.

ஆதலால் நன்மையைத் தராததீயோருடைய சேர்க்கையால் விபரீத முண்டாகுமென்று நினைத்து அத்தியஸஹவாஸத்தை விட்டு நீங்கியிருக்க வேண்டும்.

## கூடாநட்பு.

கூடாநட்பென்பது ஒருவன் தனக்குள்ள பகைமுதலியவற்றை முடித்துக்கொள்வதின் பொருட்டு மற்றொருவனுடனே பற்றில்லாமல் நட்பு கொண்டிருப்பதேயாம்.

ஸ்நேஹமான ஒருவனுக்கு இக்கட்டுவந்தவிடத்து ஸஹாயமாகவிராமல் அவனது விரோதிகளோடு சேர்ந்து பகையைவிளைவித்துக் கொண்டிருப்போன் கூடாநட்பினனென்று சொல்லப்பட்டிருக்கிறான்.

பலகெட்ட கார்யங்களையும் விட்டு நீங்கியிருப்பதின்பொருட்டாகவல்லவா நீதிநூல்களை யோதி யுணரவேண்டுமென்பது. அப்படி யுணர்ந்தும் கெடுதியையுடையவர்களாக விருந்தால் ஓதியநூலால் பலன்யாது? ஒன்றுமில்லையல்லவா? ஆதலால், அப்படிக்கொத்தவர்களுடைய நட்புக்கிடங்கொடுக்கலாகாது.

ஒருவன் ஸ்நேஹனாகிய மற்றொருவனைக் கண்டபொழுதே முகமலர்ச்சியோடு நகைசெய்து மதுரமான நல்லவசனங்களை வசனித்தாலும் அவன் உள்ளன்பிலாதவனாகக் காணப்படுவானாகில் கூடாநட்பினனென்று கருதி அவனைவிட்டு நீங்கியிருக்க வேண்டும்.

மனதினிடத்துப் பகையை யுடையவன் அதை ஸாதித்துக்கொள்வதின்பொருட்டு தன்மனக்கவட்டை வெளிக்காட்டாமல் மிகவு ப்ரியஸ்னேஹனைப்போல அபினயித்துக் கொண்டிருப்பானாகில் அவன் நயவஞ்சகனேயல்லது மெய்யானஸ்நேஹனல்லன்.

ஸ்நேஹத்திற்கு உரித்தல்லாத பகைவன் ஸ்நேஹனைப்போல உறவாடினாலும் உறவினனாகான். அவனை நம்பியொருவன் தனக்குள்ளபலமர்மங்களையுஞ்சொல்லி அவனது ஆலோசனையின்படி நடக்கவுடன்பட்டால் முடிவில் துன்பப்பட வேண்டியிருக்கும். அஃதெப்படியெனில், வில்லானது வணங்குமாயினும் – அதுகுறித்தவஸ்துவிற்குத்தீங்கையுண்டாக்கும். அதுபோல உறவாக நடக்கின்ற பகைவரிடத்திருந்து பிறக்குஞ்சொற்கள் மிகவும்வணக்கமுள்ளனவாகவிருந்தாலும் அவர்கள்குறித்தகார்யத்திற்குத் தகுந்ததாகவிருக்குமேயல்லாது நன்மையைத் தருமென்று ஒருபோதும் நினைக்கலாகாது.

பகைவன்தனது தளர்ச்சியைக்காட்டித் தொழுதாலும் அழுதாலும் அதற்கிரங்கி அவனுக்கிடங்கொடுக்கலாகாது. ஏனெனில், அவன் தொழுவதுபோல கைக்குவித்தாலும் அதற்குள் ஓராயுதம் மறைந்திருக்குமென்று பெரியோர் சொல்லியிருக்கிறார்களென்பதினாலேதான்.

பகையையுடைய ஒருவன் தான் யதார்த்தமானவனென்று பிறன்மதிக்கும்படியாகச் சிலமதுரவசனங்களைக் கொண்டு ப்ரமிக்கச்செய்தாலும் அவனிடத்து நம்பிக்கைவைக்கலாகாது. வைத்தால் அவன் தனது துர்க்குணங்களை அப்பொழுதே வெளிக்காட்டாவிட்டாலும் ஸமயம்வந்தபொழுது காட்டுவான். அப்பொழுது வியஸனப்படவேண்டி யிருக்கும்.

பகைவரிடத்துச் சிலவேளை நட்புகொள்ளும்படியாக நேரிட்டபொழுது அக்காலத்தைநோக்கி மனதினிடத்துப் பற்றில்லாமல் முகத்தால்மாத்ரம் நட்புசெய்து கழித்துவிடவேண்டுமென்பதுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

நிலையில்லாத அவிவேகிகளோடு கொண்டநட்பு நாளுக்குநாள் வ்ருத்தி யடைவதுபோலக் காணப்படுமாயினும், ஜடுதியிலிடையிட்டுக் கெடுதியடைவது மல்லாமல், கீர்த்திக்கும் கௌரவத்திற்கும் பழுதுண்டாக்கும். அஃதெப்படியெனில், வைக்கோலிற் பற்றிக்கொண்டதீ வ்ருத்தியடைவதுபோலத் தோற்றினும் உடனே அணைந்துபோவதுபோலேதான்.

அஸாத்யமானகார்யத்தை முடிக்க முயற்சி செய்கின்றவனும், எளிதில் நடத்திக்கொள்ளுங் கார்யத்தில் ஶ்ரத்தையில்லாமல் விட்டுவிடுகின்றவனும், ஆகிய இவ்விருவரும் அறிவிலானென்பதற்கையுமுண்டோ? இவர்களோடு உறவுசெய்தால் துன்பப்படவேண்டியதேயாம்.

நல்லோர்களுடைய நேசத்தைவிட்டு அறிவிலாத தீயோருடனே நட்புகொள்ள விரும்புவது எத்தன்மையதென்னில், பசுவின் நெய்யோடிட்டப்பட்ட புஜிப்பைவிட்டு வேப்பெண்ணெயோடு கூடிய புஜிப்பைவிரும்புவது போலாம்.

பார்வைக்கு அழகானரூபத்தையுடைய ஒருவன், மனஸில் ஒப்புரவில்லாதவனாக விருப்பானாகில் அவனதுஸ்நேஹம் சுண்டக்காய்ந்தபாலில் நீரைக்கலப்பதுபோ லிருக்கும்; அஃதெப்படியெனில், மதுரமான பாலில்ஜலத்தைக்கலந்தாலும் பாலின்சுவைமாத்ரங் குறைந்து நிறங்குறையா திருப்பதுபோல குணமில்லாத புத்திஹீனன் எவ்வளவு ரூபவானாக விருந்தாலும் அவனது ஸ்நேஹம் நேத்ரோத்ஸவமாகமாத்ர மிருக்குமே யல்லது அதனால் எவ்வளவும் பிரயோஜன மிராது.

அறிவினையுடைய நல்லோர்கள் புல்லறிவாளரோடு நட்புகொள்வார்களாகில் அதுவிரியன்பாம்போடு நாகம்புணர்ந்தாற்போலவாம். அஃதெப்படியெனில், விரியன்வயிற்றில் நாகத்தின் பிந்துபாய்ந்து கர்ப்பந்தரித்து வ்ருத்தியாகுமாகில் அந்நாகத்தின் ஆயுள் நாளுக்குநாள் தேய்ந்து அதுஜீர்ணகதி யடையுமென்பதுபோல அறிவிலாருடன் கொண்ட ஸ்நேஹமும் வ்ருத்தியாகுமாகில் நல்லவர்களுக்குள்ள எல்லாநன்மைகளும் நாளுக்குநாள் கெடுதியடையுமென்று நீதிகளை சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆதலால், கூடாநட்பாகிய கெட்டஸஹவாஸத்தை விஷமாகநினைத்து அதற்குதூரமாகி நல்லவர்களைக்கண்டு ஸ்நேஹிக்கவேண்டும்.

---

## கள்ளுண்ணாமை.

கள்ளினிடத்து விருப்பங்கொண்டதையுண்டு திரிகின்றவனுடையமனஸில் அச்சமென்பதெவ்வளவுமிராதென்றும், அவனுடைய முன்னோர்க ளடைந்திருந்த கீர்த்திமுதலானவை அவனிடத்திலுங் கொஞ்சஞ் சேர்ந்திருந்தால் அதுவுங்கெட்டு அவனும் இழிவுபெறுவானென்றும், முன்னூற்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஸ்வபாவமான விவேகத்தைத் தன்னியல்பி லிருக்கவொட்டாமற் கெடுப்பதற்கு ஹேதுவாகிய கள்ளை உணர்வின்றியுண்டு களித்திருப்பவனுக்குபுத்தி எவ்வளவுதெளிவுள்ளதாக விருந்தாலும் அவனைச்சான்றோர்கள் அறிவிலா மருகங்களுக்கு ஸரியாயமதிப்பார்களேயல்லது குணவானாகமதியார்கள்

கள்ளையுண்கிறத்தினாலே தமக்குமெய்மறதியுந் தமதுபுகழுக்குப்பழுது முண்டாகுமென்று அறிந்திருந்தும், அறிவிலார்போல அ

க்கள்ளை விலைகொடுத்து வாங்கியுண்டு மயங்கிக் கிடப்பவர்களை உலகம்பழியாதோ.

கள்ளையுண்டேப்ப மிடுகிறவனுக் குண்டாகுங் கெடுதியென்னவெனில், மனோவாக்காயங்களாகிய மூன்றும் ஸ்வாதீனமில்லாமற் கெடுதியடைவது மாத்ரமல்ல, இஹபரங்களிலுள்ள மற்றெவ்விதநன்மையும் அவனுக்குக்கிடையாது. ஐயோ! இவன்கதி இன்னதென்றறிந்திலேம்.

கள்ளினது ஸ்வபாவம் அதை யுண்கிறவனது அறிவைத்தெளிவில்லாமலுறக்க முறச்செய்வதாதலால், அவனுயிருட னிருந்தாலும் இறந்தவனுக்கு ஸமானமென்றேசொல்லப்படுவான்.

ரஹஸ்யப்பொருளைப் பிறருக்குச் சொல்லாமல் ஒருவன் தன்மனதினிடத்து ஒளித்துவைத் திருந்தாலும் அவன்கள்ளை யருந்துவோனாக விருப்பானாகில் அதன்மயக்கத்தால் அவன் மனதிலொளித்த ரஹஸ்யப்பொருளையும் வெளியிட்டுச் சொல்வானென்றும், அதனால் அவனடையவேண்டிய எல்லாப்ரயோஜனங்களையு மிழந்துவிடுவானென்றும், சொல்லப்பட் டிருக்கின்றதற்கு த்ருஷ்டாந்த மென்னவெனில், "சாராயத்தைவார்த்துப் பூராயத்தைக்கேள்" என்றுசொல்லும் பழமொழிதான்.

கள்ளைமறைவாகவிருந்து குடிக்கவிரும்புகின்றது ஒருவருமறியாதிருப்பதின் பொருட்டாக வல்லவா? மறைந்துண்டபின்பு அது அவனது ஸ்வபாவத்தைமறக்கும்படிச் செய்யாதோ? அப்பொழுது பிறர்கண்டு நகையார்களோ, இதனலிழிவடைய வேண்டி யிருக்குமென்று தோன்றுதோ; இதற்குஉலகம் பழியாமற் புகழுமோ?

ஒருவன்கள்ளையுண் டிருந்தும் அதையுண்ட தில்லையென்று ஸாதித்துச்சொல்லும் வசனம் மாறுவதற்கு முன்னமே முன்னுண்டிருந்த கள்ளினது மயக்கந்தலைக்கேறி அவன்புத்திக்குச் சோர்வையுண்டாக்கி அவன்ஸாதித்த வசனத்தைப் பொய்யாக்கி விடும்போது வெட்கப்படவேண்டி யிருக்குமென் றுணராமலிருப்பதற்கு அவிவேகமே காரணமென்று சொல்லப்பட் டிருக்கின்றது.

ஆதலால் உடலுலுங்கி நடுக்க மெடுப்பதற்கும், கண்சிவப்பதற்கும், ரோமங்கூச்செறிவதற்கும், வாய்நுரைத்து வெளுப்பதற்கும்,

சொற்குளறுதற்கும், மெய்மறப்பதற்கும், முகம்வேர்ப்பதற்கும், த லைதிரும்புவதற்கும், ஆள்சுழன்று வீழ்ந்து புரள்வதற்கும், சற்று அ ழுவதற்கும், உடனே நகைப்பதற்கும், நினைப்பதொன்றும் சொல்வ தொன்றுமாய் மாறுவதற்கும், மருண்டுவிழிப்பதற்கும், வாயில்வந் தபடி பிதற்றுவதற்கும, கூகதாடுவதற்கும், கொக்கரிப்பதற்கும், இ ன்னும்பல இழிவானவிகாரச் செய்கைகளுக்குங் காரணமாயிருக்கு ங் கள்ளுண்டலை நீக்கவேண்டும்.

## சூது.

சூகாடுதல் மிகவுங்கொடியது. அச்சூகால் வரும்பொருளினி டத்து இச்சைவைப்பது அதிலுங்கொடியது. ஆதலால் அதையொ ருக்காலும் நினைக்கலாகாது.

ஒருவன் சூகின்னதென்று அறியாதவனுக விருந்தாலும், அவ ன்சூகாடுமிடங்களிற்றங்கி யிருப்பானுகில் அவ்வழியால்வரும் பழி பாவங்களுக்கு அவனுமுடன்படவேண்டி யிருக்குமாதலால் அவனு க்கு உடனே தீங்குவரும்.

சூகாடுதலில் ஒருவனை ஜயிக்கத்தக்க வல்லமையுடையவனுக வி ருந்தாலும் தோல்வியடைவது வித்தமே, அதில்வெற்றிபெற்று ப்ர யோஜனத்தை யடைவதில்லையோ வென்முல், அந்தப்ரயோஜனமும் இரையால் மறைந்த தூண்டிலினிரும்பை மீன்விழுங்கியதுபோல வே யென்று ஸரியான உவமையால் உரைக்கப்பட்டிருக்கின்றது.

சூதாடுதலா லுண்டாகும் ப்ரயோஜனம் கொஞ்சமாக விருக்கி னும் அது இன்னும்பெறலாமென்கிற விருப்பத்தை யுண்டாக்குகின்ற மையால், பின்பு நேரிடும் நஷ்டம் மிகவுமதிகமாக விருக்கும். ஆ தலால், முதலிலுண்டாகிய கொஞ்சப்ரயோஜனம ப்ரயோஜனமல்ல வென்பது நன்குய்விளங்குவதுமன்றி அத்தன்மையுடைய சூதாட்டை விரும்பியவர்கட்கு அறமுமின்பமுமில்லை யென்பதும் ப்ரகாஸமாக த் தோன்றுமற்போகாது.

உருள்கின்ற பாச்சிகையினுல் வரும்பொருள் எவ்வளவாக விரு க்குமோ தெரியாது ஆனுல் அதனுல் போகும்பொருள் அரசனுடை

ய பொக்கஸத்தி லிருக்கும் த்ரவ்யத்திற்கும் அதிகமாகவே யிருக்கு மென்பது மெய்யேயாம்.

பலதுன்பங்களையு முண்டாக்கிப் புகழை யழிக்கின்ற சூதாடுத லைப்போல வறுமையைத்தருவது வேறொன் றில்லையெனக்கருதவே ண்டும்.

சூதாடுதலையும் அக்னிஷ்டத்தையும் அதற்குவேண்டுந் தொழிலை யும் மேற்கொண்டவர்கள் ஒருக்கால் உயிருடனிருந்தும், இல்லாதவ ர்களாவார்கள்; அஃதெப்படியெனில், நளமஹாராஜன் பாண்டவர்க ள், இவர்கள் சூதாடியதனால் ஸகலமேன்மையையு மிழந்து வனவா ஸஞ்செய்து வறுமையடைந்ததினாலே இருந்து மில்லாதவர்களானா ரென்பது போலேதான்.

செல்வத்தையழித்து வறுமையைக்கொடுக்கும் சூதாட்டலைவிரு ம்பி வெற்றிதோற்பறியாமல் அதிலே உழன்று திரிகின்றவர்கள் இஹ த்தில் பெருமையையும் சௌக்யத்தையு மிழப்பார்களென்பதுந் த விர, பொய் களவு முதலாகிய பாபக்ருத்யங்களைக் குறித்து ஏவப்ப டுகையால் மறுமையில் நரகபாதைக்கு பாத்ரர்களாவார்க ளெனவு ஞ் சொல்லவேண்டுத லாகின்றது.

ஆதலால், சூதென்னுங்கெட்ட செய்கையை விட்டு பகவானிட த்து நம்பிக்கைவைத்து நடப்போருக்கு எல்லா ப்ரயோஜனங்களும் எளிதில் கை கூடுமென்று அறிந்து நடக்கவேண்டும்.

---

## தீவினையச்சம்.

தொடர்ச்சியாய் பாபத்தைச்செய்துகொண்டு வரும்பாபிமேன் மேலும் பாபத்தையே செய்துகொண்டு வருவானேயல்லது வெறுமே யிரான். ஆனால் பாவங்களுக்கஞ்சி நடப்போர் யாரோ அவர்களே ஸர்வோத்தம ரெனப்படுவார்கள்.

அக்னி எல்லாவஸ்துக்களையும் தஹிக்கும் ஸ்வபாவத்தை யுடை யதாயினும் தன்னைச்சேராத வஸ்துக்களைத்தொடர்ந்து தஹிக்கமா ட்டாது. தீவினையோ வென்றால் அப்படியல்ல: ஒருவன்தனதின்ப த்தின் பொருட்டுச் செய்யும் தீவினையாகிய அக்னி அவனைஎப்பொழு

தும் தொடர்ந்து கொண்டிருந்து வேதனை செய்யும்; ஆதலால் அக்னியைப்பார்க்கிலும் கொடியது தீவினையென்று சொல்லப் பட்டிருக்கின்றது.

ஒருவன் இடைவிடாதபடி துன்பத்திற்கு ஹேதுவாகிய தீவினையைச் செய்து கொண்டிருந்தாலும் பெரியோர்கள் அதற்கஞ்சியதனைப் பொறுத்துக்கொண் டிருப்பார்களாதலால் அவர்களுடைய அறிவும் நெறியும் மிகவும் சிறந்ததாகக் கொள்ளப்படும்.

பிறருக்குத்துன் பத்தைச்செய்து கொண்டிருப்பவனை அக்கொடியசெய்கையே முடிவில் நாசமடையச்செய்யும். மேலும் அவனாலேதேனும் உபகாரஞ் செய்யப்பட் டிருந்தாலும் அதுவும் அவனுக்கு ஸமயத்தி லுதவாமற்போய்விடும்.

பொருளில்லாமை பற்றி அதுகிடைக்கும் படியாகப் பிறருக்குத் துன்பத்தைச்செய்துயிர் வாழ்வோன் பிறவிதோறும் தரித்ரத்தையடைந்து துன்பப்படுவான். ஏனெனில் "கெடுவான் கேடுநினைப்பான்" என்றுசொல்லியபழமொழி ப்ரமாணமாக விருக்கின்றதினாலேதான்.

துன்பத்திற்கு ஹேதுவாகிய செய்கைகளைச் செய்கிறதினாலேயுண்டாகிய கொடியபாபம் தொடர்ந்து வருத்தப்படுத்து மென்கிற எண்ணத்தையுடைய நல்லோர்கள் பிறருக்குத் துன்பத்தைச்செய்ய உடன்படார்கள்.

மிகவுங்கொடியவரான பகைவரிடத் திருந்துந் தப்பிப்பிழைக்க ஓருபாய முண்டாயிருக்கலா மானாலும் பாபமான கொடியசெய்கையால்வருந் துன்பத்திற்குத் தப்பிப்பிழைப்பது கூடாதென்றும்அது பிறவிதோறும் பின்சென்று வருத்தப்படுத்து மென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

ஒருவனது உருவத்தின் சாயையென்னும் நிழல் காலைப்பொழுதிலும் மாலைப்பொழுதிலும் அதிகநீட்சியாய்க்காணப்பட்டாலும்அது உச்சிப்பொழுதில் அவனது காலடியில் வந்துசேரும். அதுபோல பிறருக்குச்செய்த தீவினை அப்பொழுது ஸௌக்யம்போலக் காணப்பட்டாலும் பின்னாலே அவனைத்தொடர்ந்து நின்றுகெடுக்கும்.

பாபம்வந் தணுகாமலிருக்கும்படி காத்துக்கொள்ள விருப்ப முள்ளவன் துன்பத்தைத்தருவதாகிய தீவினையைப் பிறரிடத்துச் செய்ய வுடன்படாம லிருக்கவேண்டும்.

பாபம்செய்யின் இருமையிலும் ஸுகத்தையடைவ தில்லையென்று அறிந்த நல்லோர்கள் துர்மார்க்கத்திற் சென்று பிறருக்குத் தீவினையைச்செய்ய வுடன்படார்கள்.

ஆகலால் தீவினையென்பது பல நற்கருமங்களையுங் கெடுக்கத்தக்கதென்றுணர்ந்து இதற்கஞ்சி தூரமாக விருக்கவேண்டும்.

---

## உபகாரம்.

தெய்வலோகத்தில் ஸகலஸுகமு முளதென்பதினால் அவ்விடத்தில் இரப்போருங் கொடுப் போருமில்லை; அதைப்பற்றி அவ்வுலகத்தில் உபகாரமென்பதுமில்லை. இவ்வுலகத்திலோ வென்றால் இரப்போருங் கொடுப்போரு முண்டாயிருக்கின்றமையால் உபகாரஞ்செய்வதற்கிட முண்டென்றும், உபகாரத்தைப் பார்க்கிலும் சிறந்தசெல்வம் வேறொன்று மில்லையென்றும், சொல்லப்படுகையால் தெய்வலோகத்தைப்பார்க்கிலும் இவ்வுலகமே சிறந்ததென்று கூறப்பட்டிருக்கின்றது.

நல்லோர்கள் ப்ரதியுபகாரத்தை விரும்பாமலே உபகாரஞ்செய்வார்களென்பதற்கு நிதர்ஶனமென்னவெனில், உலகத்தாராலே ஒருகவியும்பெறாத மேகங்கள் கடல்நீரைத் தற்செயலாய்க் கொண்டுவந்துபெய்து உயிர்களை ரக்ஷிப்பதுவேயாம்.

உலகநடையை அனுஸரித்துப்பலருக்கு முபகாரஞ் செய்பவன் இறந்தாலும் பூமியினிடத்து உயிருடன் வாழ்ந்திருப்பானென்றும், அவ்வித வுபகாரத்தைச் செய்யாதவன் எத்தனைகாலம் உயிருடனிருந்தாலும் செத்தப்பிணத்தோ டொப்பாவனென்றும் சொல்லியதற்குப் பொருளென்னவெனில், முன்னோர்களினது நீதிநூலின்பொருளை யுணர்ந்து அவ்வழிபாட்டுக்கு மாறுபாடில்லாமல் உபகாரத்தைச்செய்து நடப்பவனே அறிவுடையவ னென்றும் மனுஷ்யஜன்மமெடுத்தும் உயிரிற்குரிய அறிவும் அதற்குத்தக்கசெய்கையு மில்லாவிடின்

அவன் அறிவிலானென்றும் ஆகலால் உயிரிலானென்றும் குறிப்பித்திருப்பதுவேயாம்.

உபகாரிகளிடத்துண்டாகிய செல்வம் பலருக்கு முபயோகமாக விருக்குமென்பதற்கு த்ருஷ்டாந்த மென்னவெனில், ஊருக்குள் ளிருக்கும் குளத்துநீர் பலருக்கும் உதவியாகவிருப்பதுபோலவும், அவ்வூர்மத்யையிலிருக்கும் மாமரம் தனக்குள்ள இலை காய் கனி முதலியவற்றைப் பிறருக்குத் தருவதுபோலவுமாம்.

உதவிசெய்வதே நலமென்றுணர்ந்திருக்கும் புத்திமான் தனக்கு தரித்ரம் வந்தகாலத்திலும் அவ்வுதவி செய்யும் நெறியை மறந்து தளர விடமாட்டான்; ஆனால், உபகாரஞ்செய்வதற் கிடமில்லாத விஷயத்தில் தான் ஜனன மெடுத்தது நிஷ்பல மென்று வ்யஸனப்படுவான்.

உபகாரத்தின் பொருட்டுத் தன்னைப்பிறரிடத்து விற்பது கூடாதகார்யமானாலும், அது புகழை யுண்டாக்குகின்ற படியால் அப்படி விலைப்படுவதினாலேயுங் குற்றமில்லை யென்று பெரியோ ருரைத்திருக்கிறாக ளென்பதற்கு ஹரிஶ்சந்த்ரனுடைய சரித்ரமே நிதர்ஶனமாயிருக்கின்றது.

கீர்த்திபெற்று வாழ்வதற்குக் கல்வி யாண்மை முதலாகிய காரணங்கள் பலவுண்டாயிருந்தாலும் அவைகளெல்லாவற்றிலும் உபகாரத்தால் வருவதே சிறந்தபுகழென்றும், அப்புகழ் நெடுங்காலம் நிலைபெற்றிருக்குமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

உலகத்தில் எப்பொழுதும் அழிவில்லாமல் புகழுடம்பினால் நிலைபெற்றிருப்பதற்கு உபகாரமே முக்யகாரணமா யிருக்கின்றதாதலால், மாநுஷஸ்வரூபத்தைப்பெற்ற யாவரும் உபகாரஞ்செய்வதில் மனத்தளர்ச்சி செய்யலாகாது.

உபகாரியாகிய குணவானானவன் இஹத்திலும் பரத்திலும் ஏககாலத்தில் வாஸஞ்செய்வா னென்பதற்குப் பொருளென்னவெனில், அவன் தான்செய்த தர்மத்தின் பயனால் ஸ்வர்க்காநுபவம் பெற்று மகிழ்ந்திருக்குங்காலத்தில் அவனது கீர்த்தி பூலோகத்திலும் நிலைபெற்றிருக்கு மென்பதுதான்.

பூமியினிடத்தி லெடுக்கப்படும் ஜன்மங்களில் மநுஷ்யஜன்மம் சிறந்தது. அந்த ஜன்ம மெடுத்தபின் உபகாரியென்று பெயரெடுப்பது அதிலுஞ்சிறந்தது. அப்படிக்கில்லாத ஜன்மம் ம்ருகஜன்மத்திலுந் தாழ்வானது; ஏனெனில், ம்ருகமும் வளர்ப்பவர்களுக்கு உதவிசெய்வதினாலேதான்.

ஆதலால்; ஒப்புரவறிந்து உபகாரத்தைச்செய்து புகழடையவேண்டும்.

---

## ௬௨

தமக்குள்ள செல்வத்திற்குத்தக்கபடி இரப்போருக்கில்லையென்று சொல்லாமல் கொடுப்பதையே ஆபரணமாகக் கொண்டவரிடத்து அச்செல்வம் பெருக்கமுற்றிருக்கும்.

ஒருவன் ஸன்மார்க்கத்தில் ப்ரயாஸப்பட்டு ஸம்பாதித்த த்ரவ்யத்தி லெவ்வளவாகிலும் இரப்பவர்களின் குறிப்பறிந்து கொடுத்துத் தானும் ஸுகத்தை யனுபவித்திருப்பது அவனுக்கு ஸுகஜீவனமாம். அப்படியல்லாமல் த்ரவ்யத்தைத் தேடித் தானு மனுபவியாமல் எளியவருக்குங்கொடாமல் புதைத்து வைத்துக் காப்பாற்றுவதினால் அவனுக்குப்பயனில்லையாகிலும், 'பொன்காத்தபூதம்' என்றுலக மிகழும் பயன்மாத்ர முண்டாயிருக்கலாம்.

அதிதிமுதலியோர் தங்கள் வறுமையாலிரந்து கேட்கினும் உபகாரஞ்செய்யாதவனுடைய த்ரவ்யம் எவ்வளவு திரளாக விருந்தாலும் பயனில்லாமற் கெடும். உபகாரத்திற் செலவு செய்தால் அது வ்ருத்தியாகிறது மல்லாமல் கீர்த்தியை யுண்டாக்கும்.

கிடைத்த பொருளில் நாலிலொரு பாகம் தர்ம கைங்கர்யத்தில் செலவு செய்யவேண்டு மென்று முன்னோர்கள் சொல்லி யிருக்கின்றமையால், தனக்குண்டாகிய குறைவை நினையாமல் பிறருக்குக்கொடுப்பதே சிறந்த கொடையாம்.

செல்வத்தை யுடைய ஒருவனிடத்தில் ஒருதரித்ரன் வந்தடுத்துத் தனதில்லாமையைச்சொல்லி இரந்து கேட்பானாகில் அவனதுதுயரத்தை நீக்காமல் தன்னைப்போலொத்த பாக்யவான்களுக்குக் கொடு

த்துத் தானுமுண்டு களித்திருப்பவனுடைய செல்வம் அரிய தவஞ்செய்து பெற்றதாக விருந்தாலும் இரப்போருக்குதவாமையால் நிலையில்லாம லழிந்துவிடும். ஆதலால் தாத்ருத்வ மென்னுங் கொடையே உத்தமகுணமாம்.

த்ரவ்யமின்மையால் ஒருவன் புல்லரூது படியைக் கொண்டு காலங் கழிப்பவனுக விருந்தாலும், தானுண்ணும்போது வந்த அதிதிக்குத் தானுண்ணும் ஸாதத்தில் கிஞ்சித்து பாகித்துக்கொடுத்துண்ணவேண்டும். அப்படிக்கொடாம லுண்போனை பிற்காலத்தில், 'இட்டுண்ணுதபாவி' யென்று உலகம்பழிக்கும்.

தனக்குந்தன்சுற்றத்தாருக்கு முதவுமென்றெண்ணித் தனக்குள்ள த்ரவ்யத்தைப் பிறருக்கீயாமல் பூமியினிடத்து பத்ரப்படுத்திவைக்கும் புல்லறிவாளர்களின் விவேகத்தின் தன்மையைக்கண்டு பூமிதேவி நகைசெய்வாளென்று சொல்லவேண்டியதே யில்லை. ஏனெனில் பூமியினிடத்து வைத்தபொருளை அநுபவியாமல் இறந்தவர்களைத்தணெபயர் என்று சொல்லக்கூடும்?

தானுண்டதும் ஒருவருக்குக் கொடுத்ததுமாத்ரமே தன்பொருளென்றும், உபகாரத்திற்கொடுத்த அப்பொருள் மறுமைக்குத்துணையாமென்றும், அப்படிஉபகாரஞ் செய்யாமல் காப்பாற்றிவைத்தபொருள் முடிவில் தனக்குதவாமற் போகுமென்றும் முன்னோர்கள் சொல்லியிருக்கின்றார்கள்.

நூற்றிலொருவன் ஶூரனென்றும், ஆயிரத்திலொருவன் பண்டிதனென்றும், லக்ஷத்திலொருவன் ஸபையில் ப்ரஸங்கிக்கத் தக்கவாக்குடையவனென்றும், தாதாவானவன் உண்டோ இல்லையோவென்றும், சொல்லியதில் பொருளென்னவெனில், தாத்ருத்வமே எல்லாவற்றிலும் சிறந்தகுணமென்பதாம்.

பேரிகையின்த்வனி யோஜனை தூரத்திலும், மேகத்தின்கர்ஜிப்பு பன்னிரண்டு யோஜனை தூரத்திலும், தாதாவானவனுடைய கீர்த்தி எவ்விடத்துங் கேட்குமென்று சொல்லியிருக்கின்றது.

தாத்ருத்வம், இன்சொலுரைத்தல், மனோதைர்யம், பகுத்தறியும் அறிவு, ஆகிய இக்குணங்கள் அவரவர்களுக்கு ஸ்வபாவமாக வுண்

டாகவேண்டுமே யல்லாமல் ஒருவராலே கற்பிக்கப்பட்ட குணங்களல்லவென்று சிறப்பிக்கப்பட் டிருக்கின்றன.

இறந்துபோகவேண்டியநாள் இன்னந்தூரமாக விருக்கிறதென்றும், ஆகலால் தர்மத்தைப்பின்னாலே செய்வோமென்று ஆலஸ்யமாகவிராமல் உடனே தர்மத்தைச் செய்யவேண்டும்; ஏனெனில், நமது ஆயுளும் பொருளும் நாளைக்கிருப்பது நிஜமல்ல.

பலருக்கு முபகாரம் செய்பவர்களுடைய செல்வம் படுமுதலாய் முளைத்துக்காய்த்துப் பலனையளிக்கும் பனைமரத்தைப்போல விளங்கியிருக்கும். உபகாரஞ் செய்யாதவர்களுடைய செல்வம எவ்வளவுமி குதியாக விருந்தாலும் சுடுகாட்டுக்குள் வாழும் ஆண்பனையைப்போலிருக்குமே யல்லது வேறுப்ரயோஜனத்தைக் கொடாது.

கீர்த்திபெறவேண்டுமென்றாலும், மறுமைக்குத் துணையாகவிருக்குமென்றாலும், கேட்போர்களுடைய முகத்திற்கஞ்சியாலும், நல்வழியில் ஸம்பாதித்த பொருளைக் கூடியமட்டிலும் உபகாரமாகச்செலவுசெய்கிறவர்கள் நல்லோர்களாலே கீர்த்திபெற்றுவாழ்வார்கள்.

ஆதலால், யாவரும் உபகாரமுதலிய ஸத்கர்மங்களிற் செலுத்தப்படும் தாத்ருத்வமென்னுஞ் சிறந்தகுணத்தைக் கைக்கொண்டு கீர்த்தியடையவேண்டும்.

## இனியவைகூறல்.

ஒருவன் பிறனிடத்தில் வஞ்சனையில்லாமல் அன்புடன் இன்பமாயும் ஹிதமாயுமிருக்கின்ற வார்த்தைகளைப்பேசி அவனைஸந்தோஷப்படுத்துவதே இனியவைகூறலெனப்படும்.

மனமகிழும்படியாக ஒருவனுக்குவேண்டிய த்ரவ்யத்தைக்கொடுப்பதைப்பார்க்கிலும் அவனைக்கண்டமாத்ரத்தில் முகமலர்ந்து இனியசொற்களால் வரவழைத்து உபசரிப்பதைவிட மிகுதியானநன்மை வேறொன்றுமில்லை.

ஒருவனை தூரத்தில்கண்டபொழுது முகமலர்ச்சியோடு மனமுவந்துபார்த்து அப்படியே ஸமீபத்தில் வந்தவுடனே மனமும் வாக்

கும் வேறுபடாமல் ஸிஹிதமாய் வரவழைப்பதைப் பார்க்கிலும் இனி மை வேறு வேண்டியதில்லை.

எல்லவருடனேயும் அன்போடு வசனித்துக்கொண் டிருப்பவனுக்கு உலகத்தார்கட்பாகி வேண்டிய வுதவியைச் செய்வார்களாதலால், அவனை தரித்ரம் நெருங்குவதக்கு அஞ்சும்.

பெரியவர்களிடத்து வணக்கமாகவும், மற்றெல்லோரிடத்தும் ஹிதமாகவும், அன்புடன் வசனித்து பசரிப்பவனுக்கு இந்தக்குணமே சிறந்த ஆபரணமாக ப்ரகாசித்துக் கொண்டிருக்கு மாதலால் அவனுக்கிதைவிடவேறு பூஷணம்வேண்டுவதில்லை. இக்குணங்களில்லாதவர்கள் விலையுயர்ந்த ரத்நாபரணங்களை தரித்துக்கொண்டிருந்தாலும் மண்ணினாற்செய்த ப்ரதிமைக்கு மேற்சோடித்த ஆபரணங்களைப்போ லிருக்குமேயல்லது அழகுபொருந்தாது.

பிறருக்கு நன்மையைத்தரு மினியசொற்களின்னவை யென்று ஆராய்ச்சிசெய்து அவ்வசனங்களையே சொல்லுகின்றவனுக்குப் பாபங்குறைந்து தர்மம்மேலிட்டுவளரும்; ஆதலால், அவன் இம்மையில் ஸுகத்தையும், மறுமையில் மோக்ஷத்தையும், அடைவான்.

இனியசொற்களால் பலநன்மையு முண்டாகுமென்று தெரிந்திருந்தும், அதைக்கவனியாமல் கடுமையான சொற்களைச் சொல்ல விரும்புவோன் மூர்க்கனெனப் படுவதுமன்றிப் பகைக்கும் நகைக்கும் பாத்ரனாவான்.

நன்மையைத்தரும் இனியவசனங்கள் அனந்தமுண்டாயிருக்க அவைகளை விட்டுத் தீமைகளைத் தருங்கொடுமையான சொற்களைச் சொல்ல விரும்புவது எத்தன்மையதாக விக்கிறதென்றால் புஜிப்பதற்கு மதுரமான நல்லகனிவர்க்கங்க ளிருக்க அவைகளை விரும்பாமல் எட்டிக்கனியை புஜிக்க விரும்புவது போலவாம்.

ஆதலால் நல்வசனத்தை வசனிக்கவும் கெட்டவசனங்களை நினையாதிருக்கவும் வேண்டும்.

# புறங்கூறுமை.

ஒருவன் தர்மத்தின் பெயரைக் கூட கனவிலாகிலும் நினையாமற்பாவங்களையே செய்கின்றவனுகவிருந்தாலும், அவன்பிறனைக்காணுவிடத்திகழ்ந்து பேசாதிருப்பானுகில், இவ்வொரு குணத்தினுலே அப்பாவங்களையெல்லாம் ஒழித்து புண்யபலத்தை யடைவான்.

தர்மங்களை யழிப்பதைப்பார்க்கிலும் பிறனைக்காணுவிடத்து நிந்தித்துப்பேசுவது மிகவுங்கொடியது. அவனைக்கண்டவிடத்து ஒருமையானவனைப்போல நகைபுரிந்துறவாடுவது அதிலுங்கொடியது. இவ்விதமாகப்புறங்கூறி உறவாடுவதைவிட இறப்பதேநலம்; ஏனெனில், இறந்துவிடுவதினுலே அப்பாவ மொழிந்துவிடுமென்றும், அதனுலே புறங்கூறுதவர் பெறும்பலனை மறுபிறப்பி லடையலாகுமென்றும், முன்னேருரைத்திருப்பதினுலேதான்.

ஒருவன்முன் னின்று தாக்ஷிண்யமில்லாமல் இகழ்ந்துபேசினுலுங் குற்றமில்லை, அதனுல் ஸ்நேஹத்திற்கு பங்கமுண்டாகாது. அவனைக்காணுவிடத்திற் பழித்துச் சொல்வானுகில் அதனுல் குற்றமுண்டாவது மல்லாமல், பகையால் தீமையுமுண்டாகும்.

பிறரிடத்துக் குற்றத்தையே சொல்வோன், இயல்பாகவே தர்மத்தை யெடுத்துப் பேசுவானுனுலும், அது மனமொத்த சொல்லென்று நம்பப்படாது. ஏனெனில், புறங்கூறும் அல்பகுணமவனிடத்துக் குடிகொண்டிருப்பதினுலேதான்.

பிறரிடத்துண்டாகிய பழியைக்குறித்து அவர்களில்லாத விடத்தில் இகழ்ச்சியாய்ச் சொல்லிக்கொண் டிருப்பவனது குற்றங்களிலொன்றை ஆராய்ந்தெடுத்து வெட்கப்படும்படி அவனது நேரில் சொன்னுலதைக்கேட்டு அவன் வருத்தப்படுவானே?

சுற்றத்தார் முதலாயினேர் தன்னைவிட்டு நீங்கியிருக்கும்படியாக அவர்களிடத்திற் குற்றங்கூறுங்குணத்தை ப்ரதானமாக வுடையவன் அவர்கள் ஸந்தோஷப்படும்படியான நல்வசனங்களைச்சொல்ல அறிவானே? அறிவானுகில் புறங்கூறுதலாகிய கெட்டசெய்கை அப்பொழுதே அவனை விட்டு நீங்கிப்போய்விடும்.

தன்னோடு நெருங்கி யுறவாடும் நட்பினனுடைய குற்றங்களைக்கா றைவிட்டு தூறுகத் தூற்றுகின்றவன் அயலவனிடத்து என்ன கொடுமையைச்செய்வானோ தெரிந்திலேம்.

எல்லாவற்றையுஞ் சுமக்கின்ற பூமிதேவிக்குப் புறங்கூறுவோருடைய ஶரீரத்தைச் சுமப்பது மிகவும் பளுவாயிருக்கும். ஆனால் அக்கொடியவர்களையுஞ் சுமப்பது தனக்குதர்மமென்று கருதி மௌனமாக விருக்கிறாள். அதுபோல புறங்கூறுவோருடைய குற்றங்களையும் பொறுப்பது நல்லோர்க்குக் கடைமையாயிருக்கும்.

புறங்கூறுவதற்காகப் பிறருடைய குற்றங்களை யாராய்கின்றதும் குற்றமாதலால், அவன் இந்தத்தன்குற்றத்தையும் ஆராய்வானாகில் இதனா லுண்டாகிய பாபமொழிந்து இருமையிலும் ஸுகத்தை யடைவான்.

ஆதலால், பிறர்மீது குற்றங்கூறுதலாகிய துர்க்குணத்திற் கிடங்கொடாமல் நற்குணத்தை வஹிப்பதே நலமென் றெண்ணி நடக்கவேண்டும்.

---

## பயனில் சொல்லாமை.

அறிவுடையவர்கள் வெறுக்கும்படியான வீண்சொற்களைச் சொல்லுகின்றவன் எவ்வளவு சிறப்படைந்திருந்தாலும் அவனை நல்லோர்கள் மாத்ரமல்ல, எல்லவரும் இழிவாய்ப்பேசுவார்களேயல்லது புகழ்ச்சியாகப்பேசார்கள். ஆதலால் இதை கவனிப்பவன் 'பயனைத்தராத சொற்களைச்சொல்ல' விரும்பான்.

அறிவுடையோர் கூடிய ஸபையிட்டு ப்ரயோஜனத்தைத் தராத வீண்சொற்களைச் சொல்லித் தனக்குத்தானே ஸந்தோஷங்கொண்டிருப்பவன் எவ்வளவு செல்வத்தை யுடையவனாக விருந்தாலும் அவன் நீதியை அறியாத அவிவேகி யென்று சொல்லப்படுவதற்குப்பதிலாய் வேறொன்றுஞ் சொல்லப்படான்.

நல்ல குணத்தை யுடைய கல்விமான்கள் உண்மையும், மாதுர்யமு மில்லாத அப்ரயோஜனமான சொற்களைச்சொல்ல விரும்பார்கள். விரும்புவார்களாகில் அவர்கள் முன்பெற்றிருந்த மேம்பாட்டையும் சிறப்பையும் இழந்துவிடுவார்களென்பது ஸித்தமே.

அப்ரயோஜனமானசொற்களை நல்லவைகளென்றுஎண்ணிஸதா காலமும்பிறரிடத்துச்சொல்லி மகிழ்ச்சியடைகின்றவர்களேமனிதர்களுக்குள் பதரென்று சொல்லப்படுகின்றார்கள்.

நீதியோடு சேராதசொற்களேபயனைத்தராதசொற்களாம். அவைகளை விவேகிகள் ஸ்வப்நத்திலுஞ்சொல்ல வுடன்படார்கள். உடன்பட்டாலோ, விவேகியென்கிற பெருந்தன்மை அவர்களைவிட்டுநீங்கிப் போய்விடும்.

புருஷார்த்தங்களுக்குள் முக்யமானது மோக்ஷமென்றும், அதையடைய விரும்பிய நல்லோர்கள்பயனைத்தராத வீண்சொற்களைச் சொல்லஒருபோதும்விரும்பார்களென்றும், சொல்லி இந்தநீதியை உணர்கின்றவர்கள் வீணான சொற்களைச் சொல்ல உடன்படார்கள்.

காமம்-வெகுளி-மயக்கம் – இவைகளைத்துறந்த பெரியோர்கள் மறந்தாவது புன்மொழிகளைப் பேசார்கள். ஏனெனில், புன்மொழியினாலுண்டாகுந் தீமை கொடியதென்று முன்னோருரைத்த நீதிவாக்யங்களின் பொருளை யுணர்ந்திருப்பதினாலேதான்.

ஆதலால், பயனிலாப்புன்சொற்களைப் பேசுகிறதினால் பற்பல நன்மைகளுங் கெடுமென்றுணர்ந்து அவ்வழக்கத்திற் கிடங்கொடா திருக்கவேண்டும்.

---

## தெரிந்துசெயல்வகை.

லோகத்தில் ஒருகார்யத்தைச்செய்ய முயல்கின்றவர்கள் அதனாலுண்டாகும் நன்மை தீமைகளைக்குறித்து முன்னமே விசாரித்தறிந்து பின்பு கார்ய முயற்சி செய்து நன்மை பெறவேண்டும்.

ஒருதொழிலைச் செய்வதினால் லாபமும் நஷ்டமு முண்டாவது இயல்பா யிருக்குமாதலால், நஷ்டத்தை மாத்ரம் நோக்கி அத்தொழிலை விட்டுவிடலாகாது. ஆனால் நஷ்ட மிவ்வளவா யிருக்குமென்றும் லாபமிவ்வளவா யிருக்குமென்றும் தெரிந்துகொண்டு லாபம் அதிகமாயிருக்குமாயின் தொழிலை விடலாகாது; நஷ்ட மதிகமாகக் காணப்படுகிற பக்ஷத்தில் அதையுடனே விட்டுவிடவேண்டும்.

ஒருகார்யத்தைத் தொடங்கும்போதே அதனுலுண்டாகும் லாபநஷ்டங்களின் ரீதியையும், அதை நடத்தவேண்டிய விதத்தையும், அதற்கு நேரிடு மிடையூறுகளையும், அவைகளை நீக்கிக்கொள்ளத்தக்க முகாந்தரங்களையும், இவை முதலாகிய கார்யங்களையும் புத்திகூர்மையால் பகுத்தறிந்து அக்கார்யத்தைச்செய்ய முயன்ருல் பலனை யடையலாம். இவைகளி லொன்று குறைந்தாலும் நஷ்டமடையவேண்டியிருக்கும்.

ஒருவன் தான் செய்யுந் தொழில் தனக்கு ஸாத்யமாகுமென்றும் ஆகாதென்றுந் தெரியாமல் தன்னல் நடத்தக்கூடாத அஸாத்யமான தொழிலில் ப்ரவேசித்து அதை முடிப்பதற்கு முயற்சி செய்வாஞகில் அவன் கடைசியில் பஹுநஷ்டத்தை யடைந்து கெட்டுப்போவான்.

ஒரு கார்யத்தைச்செய்யக் கருத்து கொண்டவன் அதைத்தனக்கு மேலான புத்திமான்களிடத்துச்சொல்லி அவர்களுடைய அபிப்ராயத்தைத் தெரிந்து கொண்டு பின்பு தான் தனியாக விருந்து தகும்தகாதென்று ஆலோசித்துச் செய்வாஞகில் அப்படிக் கொத்தவனுக்கு எல்லாக்கார்யமும் ஸாத்யமாகும்.

ஒரு கார்யத்தைத் தொடங்குவதற்கு முன்னமே அதைக்குறித்துத் தகுந்தபடி யோசித்துத் தொடங்கவேண்டும். அப்படியல்லாமல் தொடங்கியபின்பு ஆலோசிப்போமென்று ஆலஸ்யமாக விருந்துவிட்டால் அதனுல் நேரிடுந் துன்பத்தைக்குறித்துத் துயர முறவேண்டும். ஆதலால் எக்கார்யத்திற்கும் முன்யோசனை வேண்டும்.

எல்லவராலேயும் அங்கீகரிக்கப்படும்படியான கார்யத்தை யெண்ணிச் செய்வதே தர்மம். அப்படிச்செய்தா லதற்கு யாவரும் ஸந்தோஷமாகவே ஸஹாயம் செய்து அக்கார்யத்தை முடிவு பெறும்படி செய்வார்களே யல்லது இகழ்ச்சி செய்யார்கள். தகாத வீண்கார்யத்தைச் செய்தாலோ வெளியில் அதற்கொருவரு முடன்படாம லிருப்பது மல்லாமல் யாவருங் கைகொட்டி நகைப்பார்கள்.

ஆதலால், ஒருகார்யத்தைச் செய்யத் தொடங்குவதற்கு முன்னமே அது தகும்தகாதென்று தெரிந்து செய்யவேண்டும்.

---

# பொச்சாப்பு.

பொச்சாப்பெனப்படும் மறதி யாரிடத்திலிருக்கின்றதோ அவர்களுக்குள்ள எல்லாச்செல்வமும் சிறப்பும் அழிந்துபோகு மென்று முன்னோருரைத்திருக்கிறார்கள்.

மறதி யென்பது கோபத்தைப் பார்க்கிலும் கொடியதாம். அதைப்பற்றி லொழிக்கவனுக்கு மற்ற துர்க்குணங்க ளிருந்தாலு மவைகளை நீக்கவேண்டு மென்கிற ப்ரயத்னம் வேண்டுவதில்லை. ஏனெனில், மறதியென்னும் ஓர்குணத்தை நீக்குவதினால் மற்றவைகள் தமக்குத்தாமே விலகிப்போய்விடு மென்பதினாலேதான்.

ஒருவனை வருத்திக்கொண்டிருக்குந் தரித்ரம் அவனது அறிவை மழுங்கவைத்துக்கொண் டிருப்பதுபோல, மறதியென்னுந் துர்க்குணம் ஒருவனிடத் திருக்குமாகில், அது அவனுக் குண்டாகும் ப்ரஜோனங்களைக் கெடுத்து அவனை தரித்ரத்தில் வருந்தும்படி செய்யும்.

மறதியென்னும் மனச்சோர் வுடையவனுக்குக் கார்யத்தாழ்வு நேரிடுமென்பது யாவர்க்கும் அநுபவமாயிருக்கும். அஃதெப்படியெனில், ஒருவன் எந்தக்கார்யத்தை எப்போது செய்யவேண்டுமோ அந்தக்காலத்தை மறந்துவிடுவானாகில் அதனாலவனுக்குக் கார்யங் கெடுவதுமன்றி உத்தேஸித்த பலனுங் கைகூடாது.

பின்னாலேவரப்போகிற துன்பத்தை முன்னாடியறிந்து தப்புவித்துக்கொள்ள வேண்டிய யத்னத்தைச் செய்யாமல் மறதியினால் சும்மாயிருப்பவன் துன்பத்தை யடைவானென்றும், அம்மறதிக் கிடங்கொடாமல் கவனத்தோ டிருப்பவன் துன்பத்திற் குள்ளாக மாட்டானென்றும், சொல்லப்பட் டிருக்கின்றது.

மனச்செருக்கினா லுண்டாகும் மறதி சிறப்புடைய ஸத்கார்யங்களை யிழந்துவிடச்செய்யு மாதலாலதை யணர்ந்த நல்லோர்கள் அம்மறதிக்கிடங் கொடார்கள், ஏனெனில், அம்மறதிக்கிடங் கொடுப்பதேகேட்டுக்கிடங் கொடுத்ததாகு மென்பதினாலேதான்.

ஒருபொருளையடைய விருப்பங் கொண்டவன் மறதியாகிய சோர்வைத் தன்னிடத்தி லில்லாமல் ஒழித்துவிட்டால்தான் அவனுக்கு அப்பொருள் கைகூடும்.

ஆகலால், மனதுக்குச் சோர்வைத்தரும் மறதியைத்துறந்துவிடும் புத்திமானுக்கு எல்லாநன்மையுந்தாமே வந்துகூடுமென்கிற ப்ரமாணத்தை யாவருங்கைக் கொள்ளவேண்டும்.

---

## ஊக்கமுடைமை.

ஊக்கமுடைமையென்பது மநோதைர்யத்தையுடைத்தா யிருத்தல். இம்மநோதைர்யத்தையுடையவனுக்கு எல்லாச்சீருஞ் செல்வமுமுண்டாகும். இம்மநோதைர்ய மில்லாதவனோ வெனில், எவ்வளவு செல்வத்தை யுடைத்தா யிருந்தாலும் அதைக்காப்பாற்ற வல்லமையில்லாதவனாக விருப்பானாதலால் தரித்ரத்தால் வருத்தமடைவான்.

மனதிலுதிக்கும் உத்ஸாஹமே நிலைபெற்ற செல்வப் பேற்றுக்குக் காரணமெனவும், அவ்வுத்ஸாஹ மில்லாதவர்களது செல்வம் நிலையில்லாத ஶரீரமழிந்துவிடுவதுபோ லழிந்துவிடுமெனவும், சொல்லிய நீதியின் உண்மையை யுணர்ந்தவர்களே தைர்யவான்களென்றும், அவர்களிடத்து லக்ஷ்மிதாண்டவ மாடுவளென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

உத்ஸாஹமென்னும் தைர்யத்தையுடையவன் தன்க்குள்ளசெல்வப்பொருளை யிழந்துவிடுவானானாலும், தைர்யத்தை விடாமலிருப்பானாகில் அவனிடத்திலுள்ள தைர்யலக்ஷ்மியைத் தேடிக்கொண்டு பாக்யலக்ஷ்மியும் அவனிடத்திற்கு வந்துசேருவள்.

அல்லிப்பூவின் தண்டானது ஜலத்தின் அளவுக்குத் தக்கபடி நீண்டுவருவதுபோல உத்ஸாஹத்தை யுடையவன் அதனளவுக்குத்தகுந்தபடி வ்ருத்தியாகி மேன்மையடைவன்.

முயற்சியினாலே செல்வமும், செல்வத்தினாலே கொடையும், கொடையினாலே கீர்த்தியும், அடைந்திருப்பதற்குக் காரணம் உத்ஸாஹமென்னும் தைர்யமே யல்லது வேறல்ல. இவ்வகையாகக் கீர்

த்திபெற்றவர்களைக் கண்டு ஸந்தோஷப்படாமல் பொறாமையா லிகழ்ச்சிசெய்கின்றவர்களை உத்ஸாஹமென்னும் தைர்யமில்லாத புத்திஹீனரென்று முன்னோர்கள் சொல்லி யிருக்கின்றார்கள்.

கூர்மையான கொம்புகளையும் ஸ்தூலமான தேஹத்தையு முடைய யானையானது புலியோடெதிர்க்க அஞ்சிப்பின்னிட் டோடுமேயல்லது முன்னிற்கமாட்டாது; அதுபோல மனிதன் காத்ரமான தேஹமும், அசற்தக்கக்கபலமும், கூர்மையான ஆயுதமும் பெற்றிருந்தாலும், மனோதைர்யமில்லாத பேதையாக விருந்தால் மாற்றானுக்கஞ்சிப் புறங்காட்டியோடுவானே யல்லாமல் முன்னிற்கமாட்டானாதலால், ஊக்கத்தைக் கைவிடலாகாது.

மிகுந்த உத்ஸாஹமே மநுஷ்யனுக்கு உறுதியானவறிவாம், அஃதில்லாதவன் மாநுஷஸ்வரூபத்தைப் பெற்றிருந்தாலும் காட்டில் வாழுமரங்களுக்கு ஸரியாகவே சொல்லப்படுவான், ஏனெனில், மாநுஷமெனப்படும் மனஊக்கமும், அதைக்கொண்டு செய்யப்படுங் கார்யமுயற்சியும் இல்லாவிடின் மரமென்று சொல்வதற்குத் தடையென்ன?

ஆகலால், உத்ஸாஹமென்னும் மனோதைர்யத்தை யுடையவனிடத்து தைர்யலக்ஷ்மி குடிகொண் டிருப்பாளென்றும், அவனை ஸாதிப்பது அஸாத்ய மென்றும் சொல்லிய நீதியை யாவரும் அறிந்து நடக்கவேண்டும்.

---

## மடியின்மை.

மடியின்மையென்பது சோம்பலில்லாமையாம். அச்சோம்பலில்லாமலிருப்பவன் தான் நினைத்தகார்யத்தை முடிப்பானென்றும், சோம்பலையுடையவன் எவ்வளவுசெல்வத்தைப் பெற்றிருந்தாலும் அதை வ்ருத்தியாக்குவதுங் காப்பதும் அவனால்கூடாதகார்யமாதலால், அது நாசமுறுமென்றும், சொல்லப்பட்டிருப்பது அநுபவத்திற்கு ஸரியாயிருக்கின்றது.

ஒருவனது குடும்பம் ஹீநதசையாயிருந்தாலும், அவன்சோம்பலையகற்றி முயற்சிசெய்துவருவானாகில், அதனாலக்குடும்பம் மூனறும்

பிறைச்சந்த்ரன்போல நாளுக்குநாள் வ்ருத்தியாகி உயர்வையடையும் சோம்பலுடையவனது குடும்பமோவெனில், அதற்கெதிரிடையாக க்ருஷ்ணபக்ஷத்து சந்த்ரன்போல் நாளுக்குநாள் தேய்வையடைந்து குறைந்துவிடும்.

நன் முயற்சியைவிட்டுச் சோம்பலைமேற்கொண்ட ஒருவனதுகுடி நசுத்துப்போவது மல்லாமல், அவனுந் துன்பத்திலமுந்திக் கெட்டுப்போவான். ஏனெனில், நடப்பது நடவாமற்போகாது, நடவாதது நடக்கவறியாது, என்கிற ஆலஸ்யவசனத்தை யநுஸரித்து நடப்பது கேட்டுக்கிடமென்று முன்னூற்களி லுரைத்திருப்பதி னாலேதான்.

மிகவும்புராதன மானகப்பல் பார்வைக்கு மாத்ரம் மிகுந்தபலமுள்ளதாகக் காணப்பட்டாலும், அதைநன்றாய்ப் பரிசோதியாமல் அதனிடமாய் பலவிதசரக்குகளை யேற்றி லாபத்தை ஸம்பாதிப்பதின் பொருட்டு கடல்யாத்ரா செய்துகொண் டிருக்கும்போது அக்கப்பல் பலக்குறைவால் நடுக்கடலிலமுந்தி பலவித நஷ்டத்தையுந் தருவதுபோல ஆலஸ்யம்-மறதி-சோம்பல் இம்மூன்று குணங்களும் முதலில் இன்பத்தைத் தருவதுபோலத் தோன்றினும், பின்பு பலதுன்பத்திற்காளாக்கி விடுமென்பது ஸத்யமேயாம்.

ஒருசக்ரவர்த்தியினுடைய செல்வமுழுதும் ஒருவனுக்குமுயற்சியில்லாமலே வந்துசேர்ந்தாலும், அவன்சோம்பலை யுடையவனாகவிருந்தால் அச்செல்வத்தாலுண்டாகிய ஸௌக்யத்தையவன் அநுபவியாமற்போகிறது மல்லாமல் அச்செல்வமும் அவனையல்லாமலே அழிந்துபோய் விடும்.

சோம்பலினாலே நன்முயற்சிசெய்யாதவன் நன்னடத்தையுடையபெரியோர்களும் உத்தமஸ்நேஹரும் சொல்லிய புத்தியைக்கேளாமற் கெடுதியடைவானாகிலும், அக்கெடுதியினால்வரும் இகழ்ச்சியைக் கேள்விப் படுவதினாலுண்டாகும் வெட்கத்தினாலாகிலும் சோம்பலைவிடான்.

கார்யங்களுக்கு விக்னத்தைச் செய்யும் சோம்பலானது ஒருவனிடத்துண்டாயிருக்குமாகில் அதுஅவனைப் பகைவருக்குத் தாழ்

ந்துநிற்கும்படியாயும், அவர்களேவிய பணிவிடைகளைச் செய்யும்ப டியாயும், செய்விக்கும்.

சோம்பலைவிட்டு முயற்சிசெய்கின்றவனுக்கு யாதுகுற்றம்வரி னும் எளிதாக ஒழிந்துவிடுமென்றும், அவனுக்கு இம்மையிலும் ம றுமையிலுமுள்ள எல்லாநன்மைகளுங் கைகூடுமென்றும், முன்னோ ர்கள் உரைத்திருக்கிறார்கள்.

மடியென்னுஞ் சோம்பல் ஶரீரத்தின் வ்யாதியா யிருக்கின்றது, அதனால் குற்றமுந்துயரமுந் துன்பமுமுண்டாகின்றன. எப்படியெ னில், சோம்பலுள்ளவன் பொய்பேசப் பின்வாங்காமல் எவனுகிலு ந் தன்னை ஒருவனிடத்துக்குப் போகச்சொல்லு மளவில் உடனே அ வன்வீட்டில் இல்லையென்றும், ஒருவஸ்துவைக் கொண்டுவரச்சொ ன்னால் அது அகப்படாதென்றும், சொல்லிவிடுவான். ஆதலால், அவனுக்குப் பொய்யா லுண்டாகுங் குற்றம்நேரிடும். மேலும் சோ ம்பலுள்ளவன் தனது ஸௌக்யத்தை விரும்புவது மாத்ரமே யல்லா மல், அதற்குரியகார்யத்தைச் செய்யமாட்டான். அவனுக்குக்கார்ய முயற்சி யின்மையால் அவனுடைய செல்வமும், அநுபவமும் நாளு க்குநாள் குறைந்துவிடும். இதனால் அவனுக்குத் துயரம் நேரிடும். பின்னும் மேற்படி சோம்பலுள்ளவன் எப்போதும் அந்யனுக்குட்ப ட்டிருப்பான், அவனுக்கு ஸமீபத்திலிருக்கிற வஸ்துவைக்கூட அந் யனுடைய உதவியில்லாமற் பெறமாட்டான் அப்படிக்கொத்தவனுக்கு எந்தத்துன்பந்தான் நேரிடாது?

ஆதலால், சோம்பலுக்கிடங்கொடாமல் அதை நீக்கிவிடவே ண்டும்.

---

## புலான்மறுத்தல்.

கொல்லாமையென்னும் வ்ரதமொன்றினாலேயே ஸகலதர்மங்க ளையும் எளிதிலடையலாமென்று சொல்லியிருக்கிறபடியால், புலா லுண்ணலென்னும் மாம்ஸபக்ஷணமுங் கொலைபாதகத்தோடு சேர் ந்ததென்றும், அதையும் விலக்கவேண்டு மென்றும், முன்னோர்க ளுரைத்திருக்கிறார்கள்.

பயனில்லாத தன்ஶரீரத்தின் மாம்ஸத்தை வளர்ப்பதின் பொருட்டு மற்றொருஜந்துவைக் கொன்று அதன்மாம்ஸத்தை உண்ணவிரும்புகின்றவன் அறிவில்லாத கொடியோனென்று சொல்லப்படுவான்.

த்ரவியத்தினாலுண்டாகும் பயனை யிழப்பதற்கு அதனைக்காப்பாற்றாமையே காரணமாக விருப்பதுபோல அருளாலுண்டாகும் பயனை யிழப்பதற்கு மாம்ஸபக்ஷணங் காரணமாக விருக்குமெனப்படுவதால் புலாலைப் புசிக்கின்றவர்களுக்கு அருளில்லையென்பது ப்ரகாஶமாய் விளங்கு கின்றது.

ஸுகதுக்கங்களை உணரத்தக்கதாகிய தனதுடல் போன்றமற்றொன்றினுடலை ஸம்பாரங்களால் இனியசுவை யுண்டாகும்படி சமையற்செய்து அதையுண்டு மகிழ்ச்சியடைகின்ற கொடிய பாதகர்களுடைய ஹ்ருதயங்களில் அருளென்னுந்தயை அணுமாத்ரமும் விளங்காதென்பது ஸத்யமே.

கொல்லாமையே அருளென்றும், கொல்லுதலே அருளில்லாத பாபச் செய்கையென்றும், அக்கொல்லுதலால் வந்த வூனைத்தின்னுதல் அறனல்லாததென்றும், சொல்லிய நீதியை யுணர்ந்து நடப்பதே தர்மமாம்.

ஓருயிரையுங் கொல்லாதவனாயும், புலாலையுமுண்ணாதவனாயுமிருக்கின்ற மஹாபுருஷனை எல்லா வுயிருங் கைகூப்பித் தொழுதுவணங்குமென்று கூறப்பட்டிருப்பதின் பொருளென்னவெனில், இவ்விதப்பொருளை யுணர்ந்தவன் மறுமையில் தேவர்களினு முயர்ந்தவனாவனென்பதுதான்.

தர்மங்களுக்குள் சிறந்தது கொல்லாமையென்றும், அதனோடுகூடப் பொய்சொல்லாமையு முண்டாயிருக்குமாகில் அது எல்லாவற்றிலுஞ் சிறந்ததர்மமென்றும், பெரியோருரைத்திருக்கின்றார்கள்.

மோக்ஷத்திற்குறுதியைத்தரும் தர்மமார்க்க மென்னவெனில், யாதோருயிரையுங் கொல்லாமையாம். இதை வ்ரதமாகக்கொண்டவனது ஆயுஸ்ஸின்மீது யமனணுகுவதற்கஞ்சுவான்.

உலகமயக்கங்களை விட்டுத் ஸந்யாஸாஶ்ரமத்தைப் பெற்ற பெரியோர்களைப் பார்க்கிலும் உயர்ந்தவன் யாரெனின், யாதோருயிரையுங் கொல்லாதிருப்பவனும் புலாலையுண்ணுமலிருப்பவனுந்தான்.

இன்பத்தையுஞ் செல்வத்தையு மதிகப்படுத்திக் கொள்வதின் பொருட்டு யாகாதிவிஷயத்தில் உயிர்வதை செய்யலாகு மென்று சாஸ்த்ரப்ரமாண முண்டாயிருந்தாலும், அது சான்றேருக்கு ஒவ்வாத செய்கையாதலால் அதைக்கனவிலும் நினைக்கலாது.

ஒருவன் தனது உணவிற்காக ஒருயிரை வதைசெய்வதினு லுண்டாகிய பாபத்தை யறியாமற்போனாலும், அவனை அப்பாபம் விடாமல் தொடர்ந்துகெடுக்கும், அன்றியும் அவனைநல்லோர்கள் அருளுள்ளவனென்று நினையார்கள். ஏனெனில், ஒருப்ராணியைக்கொண்டுவந்து அதற்கு வேண்டிய ஆஹாரத்தைக் கொடுத்து வளர்ப்பதினுல் அந்தப்ராணி தன்னை ரக்ஷிக்கின்றவனென்று அவனிடத்தில் விஶ்வாஸத்தைப் பாராட்டிக்கொண்டிருக்க அதனிடத்துச் சற்றுமிரக்கமில்லாமல் அதைவதைத் துண்பதினுலே தான்.

இப்பிறப்பில் நோயினுலேயுந் தரித்ரத்தினுலேயும் வருத்தப்படுகின்றவர்களே முற்பிறப்பில் உயிர்களைவதைசெய்த கொடியோர்களென்று பலநூலோருஞ் சொல்லி யிருக்கிறுர்கள்.

ஆகலால், புலாலென்னும் ஊனைஉண்ணுமலுங் கொலைசெய்யாமலுமிருக்கவேண்டும்.

---

## கீழ்மை.

கோழியைவளர்ப்பவர்கள் நாள்தோறுங்காலமே அதற்கு நல்ல ஆஹாரத்தைக் கொடுத்து வளர்த்தாலும், அது குப்பையைக்கிளறுந் தன்ஜாதிஸ்வபாவத்தைவிடாது. அதுபோல கீழ்மையானவனுக்குத் தர்மங்களைக் கண்ணுடியைப்போலெடுத்துக் காட்டினும், அவன் அதையுணராமலும், அதனிடத்து புத்தியைச் செலுத்தாமலும், தன்னியல்பின் படியே நடப்பான்.

குற்றமற்ற பெரியோர்க ளிடத்திற்குப்போய் ஆத்மலாபத்தைப்பெறுவது நல்ல மார்க்கமென்று கீழ்மக்களுக்குச் சொல்லினும்,

அவர்கள் அதைமேற்கொள்ளாமல் நித்ரைகொள்ளவேண்டுமென்றாவதுவேறொருவேலையைச் செய்யவேண்டுமென்றாவது போய்விடுவார்களே யல்லாமல், நன்மையையடைய விரும்பார்கள்.

சான்றோர்கள் எவ்வளவுபெரிய செல்வத்தைப் பெற்றவர்களாயிருந்தாலும், தங்களுடைய ஒழுக்கத்திற்கு மாறாகநடவார்கள். கீழானவனோவெனில், அகண்டசெல்வத்தைப் பெற்றவனாக விருந்தாலும், தான்செய்யும் பொல்லாங்கான சார்யத்தில் மனஸுள்ளவனாகவிருந்து அபகீர்த்தியைப் பெறுவானேயல்லது பெருமையடையான்.

ஒருவர்செய்தவுதவி தினையினது அளவுபோல் அல்பமாகவிருந்தாலும். அறிவுடையோரதனைப்பனையினது அளவுள்ளதாகவெண்ணி நடப்பார்கள்; பனையினது அளவுக்கதிகமான உதவியை நாள்தோறும் பெற்றவர்கள் கீழ்மக்களாயின், அவர்களதைத் தினையளவாகவும்நினையாமல் இகழ்ந்துவிடுவார்கள்.

ஒருநாய்க்கு ஸ்வர்ணபாத்ரத்தில் க்ஷீரான்ன மிட்டு மனுஷ்யனைக் காவலாகவைத்துக் காப்பாற்றிக் கொண்டிருந்தாலும் அது பிறருடைய எச்சிற்கலை யெப்போது போடப்படுமோ வென்றிமைகொட்டாமற் பார்த்திருக்கும். அதுபோல கீழ்மக்களைப் பெருமை யடையும் படியான பல முயற்சிசெய்து மேன்மைப் படுத்தினாலும், அவர்கள் செய்யு மிழிதொழிலா லவர்களொருக்காலும் மேன்மையடையார்கள்.

நல்லகுலத்தோர் மிகுந்த செல்வத்தைப் பெற்றவர் களாகவிருந்துஞ் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்ல அஞ்சுவார்கள். கீழ்மக்களோ வெனில், முந்திரிப் பொன்னுக்குமேற் காணிப்பொன்னைப்பெற்றிருப் பார்களாகில் அவர்கள் தங்களை தேவேந்த்ரனுக்கு ஸமானமாக வெண்ணிக் கொண்டு ஒருவனையும் மதியாமற்பேசுவார்கள்.

பசும்பொன்னினாலேசெய்த பாதரக்ஷையினிடத்துக் குற்றமற்ற நவரத்நங்களை யிழைத்து அழகுபெறச் செய்தாலும், அது காலிலணிவதற்கு யோக்யப்படுமே யல்லது மற்றவிடத்தில் ஆபரணமாக தரித்துக் கொள்வதற்குப் பயன்படாது. அதுபோல, கீழ்மக்கள் எவ்

வளவு செல்வத்தைப்பெற்றிருந்தாலும், அவர்களது இழிதொழிலால் அல்பமாகக்காணப்படுவார்களே யல்லாமல் மேன்மையடையார்கள்.

கடினவசனங்களைப் பேசுவதும், பிறருக்கு விபத்துவந்த காலத்திலும் மனமிரங்காமற் களிப்பதும், அடுத்தவரைமதியாமல் இகழ்வதும், கோபம்வந்த காலத்தில் ஶாந்தமடையும்படி நல்லவர்கள் சொல்லிய வார்த்தைகளைக்கேளாமல் அதிகமூர்க்க மடைவதும், இன்னும் பலவும் கீழ்மக்களுக்குரிய குணங்களாம். இக்குணங்கள் ஒருவேளை உயர்குலத்திற் பிறந்த ஒருவனிடத்தி லிருக்குமாயின், அவன்கீழ்மக்களினுந் தாழ்ந்தவனவன்; ஏனெனில் அவன்தனது துர்க்குணத்தால் நற்குலத்தைக் கெடுத்தானெனப் படுவதினாலேதான்.

கர்ப்பூரத்தினாலே பாத்திகட்டி கஸ்தூரியினாலே சேறுகூட்டி ஆயிரம் வருஷம் பன்னீர்வார்த்து வளர்க்கப் பட்டாலும், உள்ளியானது தன்துர்க்கந்தத்தை விடாமல் வைத்திருப்பதுபோல் கீழ்மக்கள் எவ்வளவுகாலம் நல்லோர்களுடைய ஸஹவாஸம்பெற்றாலும், தங்கள் துர்க்குணத்தை யொருபோதும் விடார்கள்.

ஆதலால், கீழ்மக்களுடைய குணம் இத்தன்மையதென்றுணர்ந்து அந்தக்குண முண்டாகாமல் யாவருங் காத்துக் கொள்ளவேண்டும்.

---

## குடிப்பிறப்பு.

புலியானது பசியினால் வருந்த முற்றதாயினும், புல்லைத்தின்ன விரும்பாததுபோல, நல்லகுடியிற் பிறந்தவன் எவ்வளவுதரித்ரம்வந்தாலும், தன்குலத்திற்குத் தகுதியான வொழுக்கத்தை விட்டுத் தாழ்வடையான்.

நல்லொழுக்கமும், இரக்கமும், பொறுமையும், ஆகியமூன்று குணங்களையும் காப்பவர்களே நல்லகுடியிற் பிறந்தவர்க ளென்னுஞ்சிறப்பை யடைவார்கள். அப்படிக்காக்காதவர்களோ வெனில், நல்லகுடியில் பிறந்தவர்களென்று சொல்லப் படாமலிருப் பதுமன்றி, தீயவொழுக்க முள்ளவர்களென்றும், இரக்கமும் பொறுமையு மில்லாத மூர்க்கரென்றும், இகழப்படுவார்கள்.

மர்யாதைக்குப்பாத்ரரான பெரியோர்கள்வரின், உடனே யி ருந்தவிடத்தை விட்டெழுந்திருந்து எதிரேசென்று பசரித்து வணக் கத்துடனே வரவழைத்து ஆஸனத்திலிருக்கச்செய்வதும், அவர்போ கும்பொழுது கூடப்போய் அவர்நில்லுமென நிற்பதும், ஆகியவொ ழுக்கங்கள் நல்லகுடியிற் பிறந்தவர்க ளிடத்தி லிருக்குமே யல்லது மற்றவரிடத்திலிராது.

நற்கார்யங்களைச் செய்வதே நற்குலத்திற் பிறந்தவருடைய ஒழு க்கமாதலால், அவ்வொழுக்க மில்லாதவர்கள் அக்குடியிற் பிறந்தும் ப லனில்லை; ஏனெனில், தங்களுடைய கெட்டநடக்கை யால்தாங்கள் கேடுதியடைவது மல்லாமல், குலமுமிழிவடைந்து போகு மென் பதினாலேதான்.

இழிகுலத்தானிடத்து ஒருநற்குண முண்டாயிருக்கு மாகில்அ தனாலவனை நற்குடியிற்பிறந்தவனென்று எண்ணலாகாது. ஏனெனி ல், அக்குணம் அச்சத்தைப் பற்றியாவது ஒருகார்யத்தை ஸாதிப்ப தின் பொருட்டாவது உண்டாயிருக்கு மென்பதினாலேதான்.

நல்லகுடிற்பிறந்தவர்கள் கல்லாதிருப்பதினாலும், இழிதொழில் செய்யும்படி நேரிட்டதினாலும், சொற்சோர்வு பட்டதினாலும், இரப் போர்க்குக் கொடுக்க வில்லாமை நேரிட்டதினாலும், அச்சத்தையும் நாணத்தையு முடைத்தா யிருப்பார்கள். ஏனெனில், அவர்களுக்கு முன்னோர்களிருந்த நிலமைகுறைந்து இழிவானவர்களுடைய நிலை மைக்கு வந்தோமென்கிற தோற்ற முண்டாயிருப்பதினாலேதான்.

நற்குலத்திற் பிறந்த ஒருவனுக்கு கர்மாநுபவத்தால் மீளாத தரித்ரம் நேர்ந்தாலும், அவன் உலகவழக்கத்திற்கு விரோதமான கார்யங்களைச் செய்யாமல் நலமேசெய்வான். அஃதெப்படியெனில், சந்த்ரனை ராஹுவெனுங் கரும்பாம்பு ஒருபுறத்திற்பற்றி விழுங்கிக் கொண்டிருக்கினும், அதைப் பாராட்டாமல் அச்சந்த்ரன் தனது மற் றொருபுறத்தைக் கொண்டு பூமிமுழுதும் ப்ரகாஶிக்கும்படி செய்வ துபோலவாம்.

ஶ்ரேஷ்டமான குலத்திற் பிறந்த ஒருவன் தான்வறுமையுற்றகா லத்திலும், உபகாரத்தைச் செய்வானே யல்லது அபகாரத்தைச் செ ய்யான். கீழோர் அதிகமாகச் செல்வத்தைப் பெற்றிருந்தாலும், செ

ய்யவேண்டிய நற்கார்யத்தைச் செய்யாமல் அல்பவிஷயத்தில் மனதைச் செலுத்தித்தமது சிறியகுணத்தை வெளியாக்கிக் கொள்வார்கள். அஃதெவ்வாறெனின், ஸிம்ஹ சர்மத்தை தரித்திருந்த ஒரு கழுதையைப் பார்த்தவர்களெல்லாரும் ஸிம்ஹமென்று நினைத்து பயமுள்ளவர்களா யிருக்குங் காலத்தில் அது பெட்டைக்கழுதையைக்கண்டு தனது பெருங் குரலைக்காட்டி இகழ்ச்சிபெற்ற தன்மை போலவாம்.

உத்தமகுலத்திற்பிறந்த ஒருவன் யாதொரு பொருளுமில்லாமல் வருத்தமுறுங் காலத்திலும், அவனைவந்தடுத்த வெளியவருக்கு வேண்டிய உதவியைச்செய்ய ஶக்தியில்லாவிடினும், தன்னாலாகிய உதவியைச்செய்து ஆதரிப்பானேயல்லது கைசோரவிடான். அஃதெவ்வாறெனின், மஹாநதியானது வற்றிப்போன காலத்திலுந்தோண்டப்படுமாகில் நல்லஜலத்தைக் கொடுத்து தாஹத்தைத் தீர்க்குமதுபோலவாம்.

ஒழுக்கமும், மெய்ம்மையும், நாணமும், ஆகிய விம்மூன்றுகுணங்களும் உயர்குலத்தாருக்கு ஸ்வபாவமாக விருக்குமாதலால், அவர்களிவைகளை வழுவிநடவார்கள். நடப்பார்களாயின் இழிகுலத்தாரென்றே சொல்லப் படுவார்கள்.

உயர்ந்த குலத்திற் பிறந்த ஒருவனுக்குள்ள த்ரவ்யம் முன்னிருந்த அளவுக்கு அனேகம்பங்கு குறைவடைந் திருந்தாலும் அவன் அக்காலத்திலும் இரப்போர் முதலாகிய வர்களுக்கு உபகாரஞ்செய்வதில் மனத்தளர்ச்சியடையான்.

களங்கத்தையுடையசந்த்ரன் உலகத்திற்கு நன்மையைச்செய்து வருவதால் அச்சந்த்ர னிடத்துள்ள களங்கத்தைப் பெரியோர்கள்பாராட்டாமல் குணத்தையே பாரட்டி வருகிறார்கள்; அதுபோல, நற்குலத்திற் பிறந்தவர்களிடத்து ஒருவேளை குற்றமுண்டாயிருந்தாலும், அது ஒருநன்மையைப்பற்றி வந்ததாக விருக்குமேயல்லதுவேறாகவிராதென்று நினைக்கத்தக்கதாகும்.

பழமையாக வரும் நற்குலத்தி லுத்பத்தியான ஒருவன் அன்பில்லாதவனாகக்காணப் படுவானாகில், அவனது பிறப்பிடத்தைக் குறி

த்து உலகத்தாருக்கு ஐயமுண்டா யிருக்கும். ஏனெனில் நிலத்தி னியல்பை அதனிடத்து விதைத்தவிதைகளின் முளைகளாலறி வது போல புத்ரர்க ளினியல்பால் அக்குலத்தின் தன்மை யறியப்படுமெ ன் பதினுலேதான்.

ஆதலால், புத்திமான்க ளானவர்கள் தங்கள் நன்னெறிநடக்கை யால் தங்கள் குலத்திற்குச் சிறப்புண் டாகும்படி மானம் முதலான நற்குணங்களை மேற்கொண்டு நடக்கவேண்டும்.

---

## மேன்மக்கள்.

மேன்மக்க ளெனப்படும் நற்குலத்திற் பிறந்த கனவான்களுக் கியல்பாக விருக்கவேண்டிய குணங்கள் யாவெனில், மாற்றார்-அன்ப ர்-பிறர் என்னும் மூவகையா ரிடத்திலும் பேதமில்லாதஅன்பும், பழி பாவங்களுக்கு அஞ்சிநடத்தலும், வஞ்சனையின்றி யுபகரித்தலும், அ டிமைமுதலிய யாவரிடத்திலும் அருள்புரிதலும், வாய்மையா லுண் டாகும் வாக்சுத்தியும், உரைத்தசொற் றவறுமையும், பேதையரிடத் திரக்கமும், பெரியோர்களிடத்து வணக்கமும், ஸமமானவரிடத்துத் தகுதியான மர்யாதையும், இன்சொலுரைத்தலும், குலாசாரம் ஶிஷ் டாசாரம் இவைகளைக் காத்தலும், அதிதி பூஜைமுதலான ஸத்கார்யங் களைச் செய்தலும், நடுவு நிலைமையும், இன்னும்பல நற்குணங்களு மேயாம்.

மேன்மக்க ளென்னும் நற்குலத்திற் பிறந்த நல்லோர்கள் லோக கார்யங்களை விசாரித்து குணத்தையுங் குற்றத்தையு முணர்ந்து மு ன்சொல்லப்பட்டதை ஸாதித்துப் பின்சொல்லப்பட்டதை மனஸில் அடக்கிப் போடுவார்கள். அஃதெவ்வாறெனின், பரமஶிவனானவர் தி ருப்பாற்கடல் கடையப் பட்டபோது அதிலுதித்த சந்த்ரனை ஶிரஸி ல் தரித்து ஆலாஹலத்தைக் கண்டத்தில் அடக்கிய தன்மை போ லேதான்.

மேன்மக்களெனுஞ் சான்றோர்களுக்கு ஸமமாக ஆகாஶத்தில் ப்ரகாஶிக்குஞ் சந்த்ரனைக்கூட உபமிக்கலாகாது. ஏனெனில் சந்த் ரன் தன்துகுளிர்ச்சியான கிரணங்களால் உலகத்தின் இருளையகற்றி

ஜனங்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடிக்கினும், களங்கியெனப்பெயர்பெறுவான். சான்றோர்களோவெனில், அப்படிக்கல்லாமல் உலகத்தாருடைய மனதினிருளை நீக்கி யவர்களைக் களிப்புறச் செய்வதுமல்லாமல், நிஷ்களங்கரா யிருப்பதினாலேதான்.

மேன்மக்களாகிய மேலானோர் ஸாத்யா ஸாத்யங்களைக் குறித்து எவ்வளவும் நினையாமல் குணதோஷங்களை மாத்ரம் நினைத்துப் பார்த்து குணமுள்ள கார்யம் அஸாத்யமா யிருந்தாலும் தமக்குள்ள மனோதைர்யத்தினால் அதை ஸாதிக்க முயல்வார்கள். அஃதெப்படியெனில், நரியின் மீதெறிந்த அம்பு தப்பாமல் அம் ம்ருகத்தைக் கொல்லினும், ஸிம்ஹத்தின் மீதெறிந்த அம்பு தப்பிப்போய் விடினும் இதிலும் அதுசிறந்ததல்லவென்றுரைத்திருக்குந் தன்மைபோலவாம்.— இதற்குப் பொருளென்னவெனில், சிறுதொழிலை ஸாதித்ததினால் பெருமை யுண்டாகாதென்பதும், மேலானதொழிலை ஸாதிக்காவிடினும் ஸாதிக்கமுயல் வதினாலேயே பெருமையுண்டாகுமென்பதுந்தான். இதற்குநிதர்சன மென்னவெனில், பரமசிவனோ டெதிர்த்து யுத்தஞ்செய்த மன்மதன் பஸ்மமான போதிலும் இக்காலவரையில் மேன்மையான கீர்த்தியடைந்திருப் பதேயாம்.

மேலானவர்களுக்கு கர்மாநுபவத்தின் பொருட்டுவந்த தரித்ரம் அவர்களுடைய சரீரத்தை மெலிவித்து நரம்புதோற்றும்படிச் செய்யத்தக்க கொடியதாயினும், அதன்வருத்தத்தைப் பாராட்டாமல் அவர்கள் மானமெனுங் கயிற்றினால் கட்டப்பட்டவர்களாய் இரத்தல்முதலான சிறியதொழில்களிற் செல்லவறியார்கள்.

கருப்பங் கழியைக்கண்டங்கண்டமாய்த்திருத்தி ஆலையில்வைத்து நெருக்கினாலும், அது இனியசுவையுள்ள ரஸத்தைத்தருமேயல்லது கசப்பைத்தராததுபோல மேலானவர்கள் புன்மொழிகளால் நிந்திக்கப்படினும் தங்கள்வாக்கில் பொல்லாங்கான தாழ்ந்தவசனங்களை வரவொட்டாமல் மதுரமான மொழிகளையே பொழிந்துகொண் டிருப்பார்கள்.

ஆதலால், மேன்மக்களுடைய ஒழுக்கநெறியில் நின்று பெருமையடையவேண்டியவர்களுக்கிது தவிர வேறொரு மார்க்கமில்லாமையால், யாவரும் அதைக்கருதி நடக்கவேண்டும்.

# அடக்கமுடைமை.

மனோவாக்காயங்களை கெட்டவழியிற் செலுத்தாமல் நல்லவழியிற் செலுத்தலே அடக்கமுடைமையாம்.

ஆலாஹல விஷத்தைப்பார்த்து ஒருகல்விமானுரைத்திருக்கின்றதென்னெனின், அடா ஆலாஹலமே நீயேகொடியவனென்று மிகவும் இறுமாப்படையாதே. ஏனெனில், துஷ்டருடைய வாக்கில்வருகின்ற கெட்டசொற்களநேகம் உன்னினுங் கொடியவைகளாகவிருக்கின்றன வென்பதை நீயறியாயோ? அறியாய். அறிந்தாலுனக் கிவ்வளவு இறுமாப்பிராது என்பதுதான். ஆதலால் சொற்குற்றத்திலகப்பட்டு துன்பப்படுவதற்கு நாவேகாரணமாயிருக் கின்றமையால், மற்றவைகளைக் காவாவிட்டாலும் அகத்யமாய் நாவைக்காக்கவேண்டும்.

தீயசொல்லால் ஒருவனுக்கு மனவருத்த முண்டாகும்படி செய்கிறவன் பலதுன்பத் திற்கு முள்ளாகி வருத்த மடைவானென்றும், முன்தான் வருந்தித்தேடிய தர்மங்கள் யாவையு மிழந்துவிடுவானென்றும், சொல்லியிருப்பதை அநுஸரித்து அடங்கி நடப்பவர்களே அடக்கமுடையவர்கள்.

நெருப்பினாற் சுடப்பட்டபுண் ஶரீரத்தில் துன்பஞ்செய்து கொண்டிருந்தாலும், அது அப்பொழுதே நெஞ்சி னிடத்திருந்து ஆறிப்போய்விடும். அடக்கமல்லாத தீயசொல்லோ வெனில், எப்பொழுது மாறாத்துயரத்தைத்தருமாதலால், அதிலுமிது கொடியதேயாம்.

அடக்கமாகிய தர்மத்தை வ்ரதமாகக் கொண்டவர்களுக்கு அது இஹத்தில் சிறந்த ஆபரணமாக ப்ரகாஶிப்பது மல்லாமல், பரலோகத்திலு மவர்களை தேவர்களுக்குள் சிறந்தவர்களாக்கும். அடக்க மில்லாதவர்களோவெனில் இஹத்தில் நிந்தையும், பரத்தில் நரகத்தையு மடைவார்களென்று சொல்வதற்கு ஐயமுறவேண்டியதேயில்லை.

வர்ணாஶ்ரம தர்மங்களுக்கு மாறுபாடில்லாமல் அடங்கி நடப்பவர்களுடைய பெருமை மிகவும் பெரிதாக வுணரப்படும்.

வர்ணமென்பது நால்வகை யாகவிருக்கும். ப்ராஹ்மணஜாதி ப்ரஹ்ம வர்ணமென்றும், அரசஜாதி க்ஷத்ரிய வர்ணமென்றும், வணிசஜா

தி வைஶ்யவர்ண மென்றும், ஶூத்ரஜாதி ஶூத்ரர்வண மென்றுஞ் சொல்லப்படும்.

ஆஶ்ரமமென்பது ப்ரஹ்மசர்யமெனவும், கார்கஸ்த்யமெனவும், வாநப்ரஸ்த மெனவும், ஸந்யாஸ மெனவும், நால்வகையாக விருக்கும். இவ்வாஶ்ரமங்கள் ப்ராஹ்மணருக்குள்ளே மாத்ரம் இப்பொழுதும் ஸரியாக வழங்கிவருகின்றன.

ப்ரஹ்மசர்யமென்பது எட்டு வயஸில் உபநயநஞ்செய்யப் பட்டபிள்ளைகள் குருகுல வாஸம்பெற்று வேதஶாஸ்த்ரங்களைப் படித்துக்கொண்டிருப்பதும் அந்த ஆஶ்ரமத்திற்குரிய மற்றகர்மங்களையியற்றுவதுமாம். இப்படிக்கொத்த பிள்ளைகட்கு ப்ரஹ்மசாரிகளென்று பெயர்.

கார்ஹஸ்த்யமென்பது ப்ரஹ்மசர்ய வ்ரதஸமாப்தியடைந்து விவாஹஞ் செய்துகொண்டு அதற்குரிய ஔபாஸந வைஶ்வதேவாதி கர்மங்களை யியற்றுவதோடு அதிதியப்யாகத பித்ருபூஜாதி கார்யங்களையு மியற்றுவதாம். இதுவே இல்லறமெனப்படும். இந்த ஆஶ்ரமமுடையவன் க்ருஹஸ்த னெனப்படும்.

வாநப்ரஸ்த மென்பது நகரம், பட்டணம், இவைகளின்வாஸங்களைவிட்டு ஸாத்விகாஹாரம்புஜித்து ஔபாஸநாதி கர்மங்களை யியற்றி வனத்திற்சென்று தபம்புரிந்து நடப்பதாம். இந்த ஆஶ்ரமத்தை யுடையவன் வாநப்ரஸ்த னெனப்படுவன்.

ஸந்யாஸமென்பது ஶிகாயஜ்ஞோப வீதவிஸர்ஜநமும், ஸர்வஸங்கபரித்யாகமுஞ்செய்து கிராமைகராத்ரமாய் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையி லுமந்த ஆஶ்ரமத்துக்குள்ள மற்றகர்மங்களையுமியற்றி பிக்ஷாந்ந போஜனஞ்செய்து புத்ரமித்ரகளத்ரங்களைத் துறந்து விட்டிருப்பதாம். இதற்குத் துறவறமென்றுபெயர்.

இப்படிக்கொத்த வர்ணாஶ்ரம நெறிதப்பாமலும், நீதிநெறிதவறாமலும், பஞ்சேந்த்ரியங்க ளெனப்படும் ஐம்பொறிகளையும் தமதிச்சையின்படி செல்லவொட்டாமல் அடக்கிநட்டப்பதே அடக்கமுடைமையாம்.

யாவர்க்கும் நன்மையைக் கொடுக்கும் அடக்கமானது செல்வர்களிடத்தி லுண்டாயிருக்குமாகில் அது வேறொரு செல்வமாக ப்ரகாசித்துக்கொண்டிருக்கும்.

மெய்-வாய்-கண்-மூக்கு-செவி என்னும் ஐம்பொறிகளையும் அவைகளின் வழியிற் செல்லவொட்டாதபடி அடக்கவல்லவர்களுக்கு தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, ஸ்தாவரம் என்றுசொல்லிய எழுவகைப் பிறப்பிலும் அவ்வடக்க மென்னும் வல்லமையே காவலாகவிருக்கும்.

ஆகலால், அடக்கத்தைப் பார்க்கிலும் உயர்ந்தசெல்வம் வேறொன்றுமில்லாமையால், எல்லோரும் அதைச்சிறந்த பொருளாகக் கருதிக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும்.

## ஒழுக்கம்.

ஒழுக்கமானது யாவர்க்குஞ் சிறப்பைத்தருகின்றதாதலால் அதை உயிரைப்பார்க்கிலுஞ் சிறந்ததாகக்கருதி அதற் கிடையூறில்லாமல் நடத்த வேண்டு மென்பதை யுணர்ந்தவர்களே ஒழுக்க முடையவர்கள்.

இம்மை மறுமைக்குத்துணை யாகவிருக்கும் தர்மமெதுவென்று பலநூல்களையு மாராயுமிடத்து ஒழுக்கமே முக்யமெனச் சொல்லியிருக்கின்றமையால், அவ்வொழுக்கத்தை எவ்விதத்திலும் தப்பிப்போகவொட்டாதபடி காப்பாற்றவேண்டும்.

ஜாத்யாசாரத்திற்குத்தக்க வொழுக்கத்தை யநுஸரித்துநடக்கலால் நல்ல குலஸ்தனாவானென்றும், அவ்வொழுக்கத்திற்கு விரோதமாய் நடப்பவன் இழிகுலஸ்தனாவானென்றும், பல நூலிலும் விதியாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

ப்ராஹ்மணன் வேதத்தை மறந்துவிடுவானானாலும் மறுபடியுங் கற்றுக்கொள்ளலாம். ஒழுக்கத்தை விட்டுவிட்டால் அவனது உயர்ந்த ஜாதித்தன்மை கெடுமேயல்லது உயர்வாகமாட்டாது.

பொறாமையுடையவனிடத்துச்செல்வம் நிலையாததுபோலவே நல்லொழுக்க மில்லாதவனிடத்து மேன்மைநிலைத்திருக்கமாட்டாது.

ஒழுக்கத்தைக்கைவிட்டால் இழிகுலஸ்தனாக வேண்டுமென்றறிந்த புத்திமான்கள் அவ்வொழுக்கத்திலிருந்து சிறிதும்வழுவார்கள்.

நல்லொழுக்கத்தால் ஶிஷ்டத்வமும், அஃதில்லாமையால் ப்ரஷ்டத்வமும், உண்டாகுமென்பதற்கு ப்ரமாண மென்னவெனில், நன்மைக்கெல்லாம் மூலம் ஒழுக்கமென்றும், தீமைக்கெல்லாம் மூலம் ஒழுக்கமில்லாமை யென்றும், சொல்லப்பட்டிருப்பதுவேயாம்.

ஒழுக்கமுடையவர்கள் தங்கள் ஜாதிக்கும் குலத்துக்கும் தகாத பொய்முதலியவைகளை மறந்து நீக்கிவிடுவார்கள். ஒருவேளை நீக்காமலிருப்பார்களாகில் நல்லொழுக்கமில்லாத நீசனெனப் படுவதற்கு ஸந்தேஹிக்கவேண்டுவதில்லை.

கல்விக்குப்பயன் அறிவு; அறிவுக்குப்பயன் ஒழுக்கம். இவ்வொழுக்கத்தை யுணர்ந்து நடக்கக்கல்லாதவர்கள் பலநூல்களைக்கற்றும் அறிவிலாரென்றே சொல்லப் படுவார்கள்.

ஆதலால், யாவரும் ஒழுக்கத்தை மேற்கொண்டு நடக்கவேண்டும்.

## நடுவுநிலைமை.

நிதானமாக நிற்குந்தராசு இருபுறங்களிலும் வைக்கப் பட்டிருக்கும் பொருள்களின் ஏற்றக்குறைவுகளை எப்படி தெரிவிக்கின்றதோ அதுபோல நடுவுநிலைமையோர், ஸ்நேஹிதர், அந்யர், பகைவர் முதலாகிய பெயர்களிட்டு பேதநினைவின்றி பொதுவாகவிருந்து கார்யங்களை நடத்துவார்கள்.

ஒருவன் நடுவுநிலைமைக்கு விரோதமான வழியில்நின்று ஸம்பாதிக்கும்பொருள் அளவற்றதாக விருந்தாலும், அது அப்போது மாத்ரம் ஸௌக்யத்தைக் கொடுப்பதுபோலிருந்து உடனே நஶித்துப்போகுமாதலால் அவன்பின்பு தரித்ரத்தில் வருத்தப்படுவான்.

தீவினையால்கேடும், நல்வினையாற்செல்வமும், அவரவர்களுக்கு முன்பே விதித்திருந்தாலும், நடுவுநிலைமையிலிருந்து வழுவியதால் தீவினையுண்டாகிறதென் றெண்ணிப் பெரியோர் அதைமனதி னிடத்திருந்து நீக்கி ஸமமாக நடக்கின்றார்கள்.

நடுவுநிலைமை யுடையவர்க்கு வறுமைவரினு மதைப்பெரியோர்களிழிவாக நினையார்கள். ஏனெனில், ஸத்யத்தை வழுவாதபடி நடப்பவர்கட்கு வறுமைவராதென்றும், சிலவேளைவரினும் உடனே ஸூர்யனைக் கண்டபனிபோல நீங்கிவிடுமென்றும் பெரியோருரைத்திருப்பதினாலேதான். இதற்குநிதர்ஶனமென்ன வெனில், ஸத்யத்தையே பொருளாகவுடைய ஹரிஶ்சந்த்ரனை அஸத்யத்திற் குள்ளாகும்படியாக விஶ்வாமித்ரருஷி தம்மாலானமட்டும் பற்பல துன்பங்களுக்குள்ளாக்கியும், அவன் ஸத்யத்தை வழுவாதிருந்தானென்றும், அதனாலேயே அத்துன்பங்களனைத்தும் ஸூர்யனைக்கண்ட பனிபோலநீங்கி அவன் பெருமையுங் கீர்த்தியுமடைந்தா னென்றும், சொல்லியிருப்பதைவிட வேறுவேண்டுமோ?

நடுவுநிலைமையைவிட்டு அஸத்யத்தில் புத்தியைச் செலுத்தி நடக்கின்றவனுக்கு அதினாலேயே கேடுவருமென்று நல்லோர்களுரைத்திருக்கின்றார்கள்.

ஆகலால், குணவான்கள் நடுவுநிலைமையெனும் பக்ஷபாதமின்மையைக் காத்தலே பலதர்மங்களையுங் காத்தலெனக்கருதி நடந்துகொள்ளவேண்டும்.

## பொறையுடைமை.

பொறையுடைமை யென்பது பொறுமையுடைமை. பொறுமையுடையவர்களோ ஹீனர் பலவாக இழிந்துபேசினாலும், பூமிதேவியைப் போல பொறுத்துக்கொண் டிருப்பார்களே யல்லது கோபித்து ஹீன வார்த்தைகளைச் சொல்லார்கள்.

வந்த விருந்தினரை நீக்கிவிடுதல் தரித்ரத்தில் தரித்ரமெனச் சொல்லப்பட் டிருப்பதுபோல, அறிவில்லாதார் செய்த தீங்கைப் பொறுத்தல் வல்லமையில் வல்லமையென்று சொல்லப்பட் டிருக்கின்றது.

பிறராலுண்டாகுங் கெடுதியைப் பொறுத்துக் கொள்ளாமல் அவர்களுக்குத் துன்பத்தை விளைவிக்கின்றவர்கள் எவ்வளவு சிறந்தவர்

களாக விருந்தாலும், அவர்களை நல்லோர்கள் சண்யமாகக் கொள்ளார்கள். அக்கெடுதியைப் பொறுத்துக்கொண் டிருப்போர்களையோவென்றால், மிகவுங் குணவான்களாகக் கொள்வார்கள். ஏனெனில் 'பொறுமைகடலினும் பெரிது' என்று கூறப்பட்டிருப் பதினாலேதான்.

ஒருவன் மற்றொருவனுக்குத் தீங்குசெய்தால் அவனதைப் பொறுக்காமல் அதற்குப்பதிலாக மற்றொருதீங்கை விளைவித்து அவனை நாசமுறும்படி செய்வதில் ப்ரயோஜனமென்ன? நாம்நினைத்தபடி செய்து முடித்தோமென்கிற ஸந்தோஷந்தானே? நமக்கு அபகாரஞ்செய்தவனுக்கு நாமும்ப்ரதி யபகாரஞ் செய்தோமென்கிற த்ருப்தியுமுண்டோ? ஆனால் இவ்விரண்டும் நல்லோர்களுக் குரியதன்மைகளல்லவே ஆதலால் இத்தன்மையுடையவர்களை நல்லோர்கள் பழிப்பார்களென்பதையும், ஒன்றுக்கு ப்ரதியாகச் செய்யப்படும் அபகாரமும் பாதகந்தான் என்பதையும் கருதிப்பொறுமை கொண்டிருக்கவேண்டும்.

துர்மார்க்கருடைய வாயிற்பிறக்குங் கொடியசொற்களைக்கேட்டும் பொறுத்துக்கொண் டிருக்கும்படியான குணவான்கள் இல்லறத்தில்வாழும் லௌகிகராக விருந்தாலும், அவர்கள் துறவறத்தில்வாழும் முனிவர்களைப்பார்க்கிலும் சிறந்தவர்களாவார்கள்.

ஆஹாரம் நித்ரை பயம் முதலாகியவைகள் ம்ருகங்களுக்கும் மநுஷ்யருக்கும் ஸாமான்ய தர்மமாக விருக்கின்றன; ஆனால் மநுஷ்யருக்கிருக்க வேண்டிய விசேஷகுணங்களென்னவெனில், யுக்தாயுக்தங்களைப் பகுத்தறியும் அறிவும், அதனாலுண்டாகும் பொறுமையுந்தானே.

ஒருவன் சாந்த்ராயணம் முதலிய மஹாவ்ரதங்களைப் புரிந்து உண்டிசுருக்குதல் முதலான வருத்தங்களைப் பொறுத்தாலும் பிறராலுண்டாகுந் தீமைகளைப் பொறாவிடின் அவனுக்குப் பெருமையில்லை. அவைகளைப் பொறுக்கத் தக்கவனேனெனில், யாதொருவ்ரதத்தையு மியற்றாவிடினும், பெருமையடைவான்.

உலகத்தில்பொறுமை யென்பதுதான் பலநற்குணங்களிலுஞ் சிறந்தது. இக்குணம் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் இன்னும்

பெரியோர்களுக்கும் புத்திமான்களுக்குங் கூடஉண்டா யிருப்பது அரிதென்பதைக் குறித்துப் பூர்விகர்களுரைத்த த்ருஷ்டாந்தங்கள் பலவுண்டு; ஆகலால், ஸாமான்ய ஜனங்களிடத்தில் இக்குணமிராதென்பது ஸித்தமே. ஆயினும் இது கொடியதல்ல; ஏனெனில், துர்மார்க்கரிடத்தி லுள்ள பரநிந்தைமுதலான கெட்டகுணங்களைக் குறித்து அவர்களை தண்டித்தாகிலும் ஸன்மார்க்கத்திற்குக் கொண்டுவர முயலவேண்டியது உத்தமர்களுடைய கடமையென வுரைத்திருப்பதினாலேதான். இது தீமையிற் பொறை யின்மையெனப்படும். மேலும் உலகத்தில் சிலதுர்மார்க்கருண்டு. அவர்கள் துஷ்கார்யங்களைச் செய்து கெடுதியடைகிற ஸமயத்தில் ஸன்மார்க்கர் யாராகிலும் அவர்களுடைய நன்மையைக் கோரி நற்புத்தி சொல்வார்களாகில் அதையும் நிந்தையாகக் கொண்டு பொறுமையை விட்டுக்கோபமடைந்து அவர்களுக்கு அபகாரத்தைச் செய்கிறார்கள். ஒருவன் தனக்குச்செய்யப்படும் நன்மையைக் கூடப்பொறாம லிருப்பானாகில் அவனுடைய குணத்தை யென்னவென்று சொல்லலாம்? நன்மையிற் பொறையின்மையென்று சொல்லலாமோ? அக்குணமுள்ளவர்களுடைய அவிவேகத்துக்கு அளவுண்டோ? அதை இழித்துச் சொல்லச்சொல்லுண்டோ? அதற்குபமிக்கக் கதையுண்டோ? இல்லை. ஆகிலும் தொடர்ந்துவருகின்றகதை முக்யமாய் வேறுவிஷயத்தைப் பற்றியதாக விருந்தாலும், அதை இவ்விடத்தி லுரைக்கலாகின்றது.

அஃதாவது, ஒருவ்ருக்ஷத்தினிடத்து ஒருபக்ஷி வெயிற்காலத்திற்கும் மழைகாலத்திற்கும் ஸௌக்யமாக விருப்பதின் பொருட்டு ஒருகூடுகட்டிக்கொண்டு அதில் வாஸஞ்செய்துகொண்டிருந்தது. அப்படியிருக்கையில் நேரிட்ட மழைகாலத்தின் ஒருதினத்தில் அந்த வ்ருக்ஷத்தினிடமாகவந்த ஒருவானரம் அம்மழையில் நனைந்துவருத்தமடைவதைக்கண்டிரக்கமுற்ற அந்தப்பக்ஷி வானரத்தைப்பார்த்து ஓய்வானரமே, நீர் என்னைப்பார்க்கிலும் அநேகம்பங்கதிகமான ஸ்தூலதேஹத்தை யுடைத்தாயிருக்கிறீரே, உமக்குக்கைகளுங் கால்களும் நன்றாயிருக்கின்றனவே, நீரும் ஒருவீடுகட்டிக்கொண்டு என்னைப்போலே ஸௌக்யமடைந்திருக்கலாகாதா! என்று சொல்லியவசனத்தைக்கேட்ட அவ்வானரமதை நலமென்றுணராமல் தனதறிவின்மையால் கோபங்கொண்டு அப்பக்ஷியைநோக்கி நீயோ ஒருசிறிய

பக்ஷி என்னைப்பார்த்து இப்படிச் சொல்லலாமோவென்று உடனே அக்கூட்டைப் பிடித்திழுத்துச் சின்னபின்னமாக்கி யெறிந்துவிட்டது. ஆதலால், அறிவிலாதமூடர்கள் நன்மையைச்சொன்னாலும் பொறார்கள்.

ஸமானமல்லாத ஒருவன் எதிரில்நின்று இழிவான புன்மொழிகளை வரம்புகடப்பிவகதறினாலு மதற்குச்செவிகொடாமல் பொறுமையாக விருத்தலே பெருமை. இதையுணராமல் அவனை வெல்லவேண்டுமென்கிற கருத்துக்கொண்டவனோடு வாதிடுகிறவனுக்கு முன்னுள்ள பெருமையுங்குறைந்துவிடும். எப்படியெனில், குணாக்கும் ஸ்வானத்தோடு குணாக்குந் தன்மைபோலேதான்.

அறியத்தக்கவைகளை யறிதலும், அடக்கத்தக்கவைகளை அடக்குதலும், அஞ்சத்தக்கவைகட்கு அஞ்சுதலும், இம்மை மறுமைக்குரிய நடைகொண்டுலகத்தை ஸந்தோஷிக்கச் செய்தலும், ஆகிய குணங்களை யுடையவர்களே பொறுமை யுடையவர்களென்றும், துயரமற்ற வுலகவாழ்க்கை யுடையவர்களென்றும், முன்னோர்களுரைத்திருக்கிறார்கள். அறியத்தக்கவைகள் வர்ணாஸ்ரமங்களுக்குரிய தர்மங்களெனவும், அடக்கத்தக்கவைகள் ஐம்பொறிகளெனவும், அஞ்சத்தக்கவைகள் பழிபாபங்களெனவும், உலகத்தை ஸந்தோஷிக்கச்செய்தல் இல்வாழ்க்கை நெறிதவறாமல் அதிதிபூஜைமுதலிய ஸத்காரங்களைச்செய்து யாவருங் களிப்புறச்செய்தலெனவுங் கொள்க.

ஆதலால், மனிதன் பொறையுடைமையென்னும் ஸுகுணத்தைத்தனது ஆசார்யானுக்ரஹஞ்செய்த மெய்ப்பொருளாகக்கொண்டு நடக்கவேண்டும்.

---

## பெரியாரைத் துணைக்கொளல்.

தர்மத்திலும்ஸீலத்திலும் வழுவாதிருத்தலும், அறியாமல் நேரிட்ட துன்பங்களைக்கூட உடனே விலக்கிவிடுதலுமான குணங்களை யுடையவர்களே பெரியவர்களென்று சொல்லப்படுவோர்கள். இப்படிக்கொத்த நன்னெறி நடையுடையபெரியோர்களை யநுஸரித்து அவர்களைத்துணையாகப் பெற்றுக்கொள்வதே ஒருவனுக்கு முன்னோர்வைத்

த பொருளிலும் மேன்மையான பொருளென்று சொல்லப்படும். ஏனெனில் அவர்கள் தங்களை யடுத்தவர்களைச் சீர்படுத்தி நன்மைபெறச்செய்வார்க ளென்பதினாலேதான்.

தானடைந்திருக்குஞ் செல்வத்தைப் பார்க்கிலும் சிறந்த செல்வ மென்னவெனில், அறிவுடைய பெரியோர்களை யடுத்து அவர்கள் சொற்படிகேட்டு நடந்து நற்பயன்களைப் பெறுதலேயாம்.

ஒருவனுக்கு நட்பாளர் பலபெயரிருக்கலாம். ஆனால் அவர்களுக்குள்ளே பெருந்தன்மையும் யோக்யதையுமுள்ள புத்திசாலிகள் இன்னவர்களென்று புத்திகூர்மையால் பகுத்தறிந்து கொண்டு அவர்களைத் தனக்குத் துணையாகப்பெற்று அவர்களைக் கொண்டு தனக்குள்ள கார்யங்களைச் சீர்படுத்திக் கொள்ள வேண்டுமென்று முன்னோர்கள் சொல்லியிருக்கிறபடி நடப்பவனே நட்பினாலுண்டாகும் ப்ரயோஜனங்களை யடைவான்.

பெரியோர்களுடைய ஸஹவாஸம்பெற்று அவர்கள்காட்டிய நல்வழியிற் செல்லும் ஒருவனுக்கு ஒருதுன்பமு முண்டாகமாட்டாது; ஏனெனில், அப்பெரியோர்களுடைய ஸஹவாஸ மென்னும் அநுக்ரஹமே அவனுக்கு நேருந்துன்பங்களைத் தடுக்க ஆளாகவிருக்குமென்பதினாலேதான்.

குற்றங்கண்ட அப்பொழுதே கோபித்துத் தக்கபடி புத்திசொல்லித் திருத்துகின்ற பெரியோர்களுடைய துணையைப்பெற்ற ஒருவனைக் கெடுப்பதற்காகப் பகையாளிக ளொருவருமிருக்க மாட்டார்கள். ஒருவேளையிருந்தாலும் அவர்களுடைய யத்னம்முடிவுபெறாது.

உறுதியான நல்வசனங்களைச் சொல்லிச் சீர்திருத்துகின்ற பெரியோர்களைத் துணையாகக் கொள்ளாதவனுக்கு எவ்வளவு பலமிருந்தாலும், பகைவர் ஒருவருமில்லாவிட்டாலும், விவேகமில்லாமையால் அவன் தானே தீயவழியிற் சென்று கேட்டையடைவானென்று சொல்வதற்கு ப்ரமாணத்தைத் தேட வேண்டியதேயில்லை.

வ்யாபாரஞ்செய்ய விரும்பியவனுக்கு முதற்பணமிருக்கவேண்டும். அப்படி முதலில்லாமல் வ்யாபாரஞ்செய்ய விரும்புவது எத்தன்மைய தெனில், ஏரில்லாதவன் உழுதடித்தானென்று சொல்லுங்

கதைபோலிருக்கும். இதுபோலவே பெரியோர்களுடைய துணையைவிட்டு வ்யாபாரஞ்செய்ய முயல்வோனுக்கு முதற்பணமிருந்தும் லாபத்தைப் பெறுவதும் ஒருவேளை முதலைக் காப்பதுங்கூட அரிதாகவிருக்கும். ஏனெனில் விவேகமுள்ள ஸார்த்தருடைய துணையில்லாதவனுக்கு கார்யங்களை நடத்துங் கூறுபாடு தெரியாதென்பதினாலேதான்.

பெரியோர்களுடைய துணையைக் கைசோரவிட்டுத் தன்மனதின்படி நடக்க முயல்கின்றவன், பலவிக்கட்டுகளை அனுபவிக்கவேண்டும். அவனுக்குப் பலபெயர்களுடைய பகையுமேற்படும்.

ஆகலால், பெரியோர்களைக் கண்டு அவர்களோடுறவாடி அவர்கள் சொற்படிநடத்தல் நன்மைபயக்குமென் றுணரவேண்டும்.

---

# அழுக்காறு.

அழுக்காறென்பது ஒருவனுடைய செல்வத்தைக்கண்டு பொறாமைப்படுகின்றதுதான். இப்பொறாமை யில்லாதவனிடத்துச் செல்வம் வளர்ந்தேறுமென்றும், எல்லவருமவனைத் துதிப்பார்களென்றும் கூறப்படுகின்றது.

பிறருடைய செல்வத்தைக்கண்டு அருவருப்புக்கொள்பவன் எவ்வளவு மேன்மையுடையவனாக விருந்தாலும், அவன் தனக்குள்ள தர்மத்தையும் புகழையுமிழந்து துன்பப்படுவான்.

இஹபரங்களில் துன்பத்தையுண்டாக்கும் பொறாமையென்பது மிகவுங்கேட்டிற்கிடமான துர்க்குணமென்றறிந்த நல்லோர்கள் அக்கொடிய துர்க்குணத்திற் கிடங்கொடார்கள். ஒருவேளை கொடுப்பார்களாகில் அவர்கள்பெற்றிருந்த நன்மைகள் யாவும் அப்பொழுதே அவர்களைவிட்டு நீங்கிப்போய்விடும்.

ஒருவனுக்கு உபகாரமாய்க் கொடுக்கும் த்ரவ்யத்தைக்கண்டு பொறாமைப்படுகின்ற ஒருவன் செல்வமுடையவனாகவிருந்தாலும் அவனது செல்வத்தை அப்பொழுதே யிழந்து தரித்ரத்தை யடைவதுமல்லாமல் தன்னைச்சார்ந்தவர்களுடைய செல்வத்தையு மிழக்கும்படிசெய்வான்.

ஒருவனிடத்து ஸ்ரீதேவி வாஸஞ்செய்து கொண்டிருப்பாளாயினு மவன் பிறர்செல்வத்தைக் கண்டு பொறாமைப் படுவானாகில் அவனிடத்து வஸித்திருந்த ஸ்ரீதேவி யுடனே விலகிப்போய்விடுவாளாதலால் அவனிடத்தில் மூதேவிவந்து குடிகொள்வாள்.

பொறாமையுடைய ஒருவன் இம்மையில் தனக்குள்ளசெல்வத்தையிழந்து தரித்ரத்தில் வருந்துவதுமல்லாமல் மறுமையில் மோக்ஷத்தையிழந்து நரகவேதனையில் சிக்கிப் பரதபிப்பான்.

பொறாமையினாலே செல்வத்தையும், பொறாமைப்படாமையினாலே தரித்ரத்தையுமடைந்தவ ரொருவருமில்லையென்று முன்னோருரைத்த வாக்யங்கள் பலவுண்டென்பதை யுணர்ந்துநடப்போர் பொறாமையெனும் பாபத்திற்குட்படார்கள்.

பொறாமையுடைய ஒருவனுக்கு வேறொரு சத்ருவில்லாவிட்டாலும், அவனைக்கெடுப்பதற்கு அப்பொறாமையே சத்ருவாகவிருக்கும். இதற்கொருகதையுண்டு, அஃதெப்படியெனில்:—

ஒருவன் மற்றொருவனுடைய செல்வத்தைப் பார்த்துப் பொறுக்கமாட்டாமல் காட்டிற்சென்று வாஸஞ்செய்துகொண் டிருந்தான். அவ்விடத்தில் ஒருதபோதனர் அவனைப்பார்த்து இரக்கமுற்று ஒரு வெண்கலமணியைக் கொடுத்து நீயிதைக் கொண்டுபோய் இதற்குப் பூஜைசெய்து உன்கோரிக்கையைச் சொல்லி மூன்றுதரம் அடிப்பாயானால் நீகோரியபொருள் யாவும் உனக்கு உண்டாகக் காண்பாய். இப்படிக்கு மூன்றுதரம் உன்கோரிக்கையிட்டாம் ஆனால் நீகோரியதற்கு இருமடங்கதிகமாக உன் அண்டைவீட்டுக் காரனுக்குவிருத்திக்கும். ஆகலால் அதற்காக நீபொறாமைப் படலாகாது என்று உரைத்தார். அவன் அந்த மணியைவாங்கிக்கொண்டு வீட்டிற்குவந்து அண்டைவீட்டுக் காரனுக்கு இருமடங்கதிகமாக விருத்திக்குமென்பதைமறந்து மணிக்குத் தூபதீபங் கொடுத்துத் தனக்கு க்ரஹபூமிகள் தநதான்யங்கள் ஆடையாபரணங்கள் மிகவுமுண்டாக வேண்டுமென்று சொல்லிமூன்றுதரம் மணியடிக்கமாத்ரத்தில் யாவும் அப்படியே உண்டாயின. அவனண்டை வீட்டுக்காரனுக்கு மப்படியே அவைகளெல்லாம் இரட்டிப்பு அதிகமாக வுண்டாயின. அதைக் கண்டுபொறுக்கமாட்டாமல் அவன் அயலகத்தானைக் கெடுக்க நினைந்து

இரண்டாந்தரம் மணிக்குப் பூஜைசெய்து எனக்கொருகண் குருடா க வேண்டுமென்றும், மூன்ருந்தரம் பூஜைசெய்து என்வீட்டில் பா திமூழ்க வேண்டுமென்றும், சொல்லிமணியடித்தான். உடனே அயல் வீட்டுக்காரனுக்கு இரண்டுகண்களுங் கெட்டு அவன்வீடு முழுது ம் வெள்ளத்தில் அமிழ்ந்துபோயிற்று. இவ்விதமாய் ஊர்முழுதும் நாசமடைந்தபடியால் சிலதுஷ்டர் கூடி அந்தப்பொருமைக் காரனை யடித்து அவன் பொருள்களைப் பறித்துக்கொண்டு படகின்பேரில் போய்விட்டார்கள். அப்போது அவன்மிகவுங் கூக்குரலிட்டழுதா ன். ஆனல் அதைக்கேட்டு அவனையாதரிப்பவர்கள் யாருமில்லாமற் போனார்கள். உடனே அவன் என்னுடைய பொருமையினலே யல்லோ வாஎனக்கு இந்த ஆபத்துவந்தது; என் அண்டைவீட்டுக்காரரை ந ஸிக்கும்படி செய்யாம லிருந்தால் இந்த்ஸமயத்தில் அவர்கள் உபகா ரஞ்செய்வார்களே, என்று வ்யஸனப்பட்டான்.

ஆதலால், பொருமையென்னுந் துர்க்குணத்தால் தரித்ரத்தை யும் ஆபத்தையு மடையவேண்டு மென்கிற நிஸ்சயத்தை யறிந்து அ தற்கிடங் கொடாமல் நடக்கவேண்டும்.

---

## கள்ளாமை.

கள்ளாமையென்பது பிறருடைய பொருள் முதலியவற்றைக் க ளவுசெய்யா திருக்கவேண்டு மென்பதாம். களவுசெய்பவர்கள் இம் மைமறுமைப்பயன்களை யிழந்துவிடுவார்களென்று நீதிகளில் சொ ல்லப்பட்டிருக்கின்றது.

சோரத்வத்தினல் வரும்பொருள் மிகுதியாகுவதுபோல்தோற் றினும், அது பாபத்தையும் பழியையும் அவனிடத்து நிலைக்கச்செய் வதுமன்றி யவனையல்லாமலே நாசமடையும்.

களவினல்தேடியபொருளை யநுபவிக்கும்போ துண்டாகிய ஸுக ம் அக்களவாளிக்கு மிகவுமினிதாகத் தோற்றினும், அது உடனே அவனுக்கு நீங்காததுன்பத்தை யுண்டாக்குமென்பதற்கு நிதர்ஸன மென்ன வெனில், "பலநாளைத்திருடன் ஒருநாளைக்ககப்படுவான்" என்றுவழங்குவதும், அகப்பட்டபின்பு பலஜனங்களாலு மிகழப்ப ட்டு ராஜதண்டனையில் வருந்துவதும் ப்ரத்யக்ஷமா யிருப்பதுதான்.

பிறருடையசோர்வுகண்டு அவர்களுடைய பொருள்களைத் திருட உடன்பட்டவன் கல்வியில்வல்லவனாகவிருந்தாலுமவனிடத்து அருளுமன்புமில்லை யென்பதற்கையமில்லை.

களவுசெய்வதில் மிகுதியான ஆசையுடையவொருவன் உலகத்திலுள்ள மனிதர்களுடைய நல்வினையையும் தீவினையையுமறிந்து நடக்க அறிவானோ? அறியானென்பது ஸித்தமே.

களவென்னுந் தீயகுணத்தின் அளவையறிந்து நடக்கின்ற நல்லோர்களுடைய மனஸில் தர்மகுணம் எப்போதும் நிலைபெற்றிருக்கும்; இதுபோலவே, அத்தீயகுணமுள்ள களவாளிகளுடைய மனஸில்எப்போதும் வஞ்சனையெனுந் துர்க்குணங் குடிகொண் டிருக்குமென்பது அநுபவத்திற்கும் ஸரியாகவேயிருக்கின்றது.

களவெனப்படும் சோரக்ருத்யம் பஞ்சமஹா பாதகங்களில் ஒன்றாகச் சொல்லப்பட்டிருந்தும், அதற்கு அஞ்சாமல் அதைச்செய்கிறவனிடத்தில் மற்றெந்த தர்மமுண்டாயிருக்கும்? ஒன்றுமிராது. மேலும் களவுசெய்கிறவர்களுக்குப் பாபத்தின் பயமில்லாவிடினும், ராஜதண்டனையடையவேண்டு மென்பதுதெரிந்திருக்கையில் அதற்குக் கூடப் பயமில்லாமையால் அவன்பின்னை யெதுக்குத்தான் பயப்படுவான்? ஆ! கொடியபாதகா, களவாளா, உனக்கும் உன்மகளுக்கும் என்னகதியோ யார்க்குத்தெரியும்?

களவுசெய்பவன் இம்மையில் ராஜதண்டனைக்கும், மறுமையில் நரகவேதனைக்கு முட்படாமல் தப்பிப்போகானென்பது ஸித்தமென்று முன்னோருரைத்திருப்பதற்கு "திருடன் பெண்ஜாதி யென்றுங் கைம்பெண்ஜாதி" என்னும்பழமொழி கூடவொத்திருக்கின்றது.

ஆதலால் களவென்னுஞ் சோரக்ருத்யத்திற் கிடங்கொடுப்பதினால் மஹத்தானஆபத்து நேரிடுமென்பதை யுணர்ந்த தனிடத்து மனஸைச்செலுத்தாம லிருக்கவேண்டும்.

---

## வெஃகாமை.

வெஃகலென்பது பேராசையும், வெஃகாமையென்பது ஆசையின்மையுமாம்.

பிறருடைய பொருளினிடத்து இச்சைகொள்வது தர்மமல்லவென்று நினையாமல் அவர்கள்பொருளை யபஹரிக்க உடன்பட்டவன் பலகுற்றங்களுக் காளாகித் துன்பப்படுவது மல்லாமல் அவனது குடியுங் குலமும் நாசமடையும்.

பிறருடையபொருளை அபஹரிப்பதினால்வருங் குற்றம் அளவிடக்கூடாததாக விருக்குமென்றறிந்த நல்லோர்கள் நடுவுநிலைமையின்மையால் வரும்பொருளை அணுகுவதற்கு அஞ்சிநடுங்குவார்கள்.

பிறரிடத்திருந்த பஹரிக்கப்பட்ட பொருளினால்வரும் இன்பம் நிலையாவிடினும், துன்பம்மாத்ரம் நிலைபெற்றிருக்கும் ஆதலால் நல்லோர்கள் நல்வழியில் வரும்பொருளை விரும்புவார்களே யல்லாமல் தீயவழியில்வரும்பொருள் எவ்வளவாகவிருந்தாலும் அதை ஒருபோதும் விரும்பார்கள்.

ஐம்புலன்களினாசையையும் பற்றறவொழித்த அறிவுடையோர் பிறர்பொருளை விரும்புவார்களோ? விரும்பார்கள். ஏனெனில், உண்மையானபொருளை உள்ளபடி உணர்ந்தவர்கள் அநித்யமான பொருளினிடத்து ஆசைவையார்க ளென்பதினாலேதான்.

ஒருவனைவஞ்சித்தீட்டிய பொருளினாலுண்டாகும் இன்பத்தை யினியதாகக் கொள்கிறவனுக்குப் பின்னடியில் அதனால்வருந்துன்பம் இப்படிக்கொத்ததென்று தெரிந்திருக்குமோ! தெரிந்திராது; தெரிந்திருந்தால் அவன்மற்றவனை வஞ்சிக்க நினையான்.

ஒருவன் செல்வமில்லாதவனாக விருக்கையில் செல்வத்தையதிகமாகப் பெறுவதற்கும் அதுமேன்மேலும் வ்ருத்தியடைவதற்குங் காரணமென்னவென்று ஆராய்வானாகில் பிறருடைய பொருளை விரும்பாமைதானென்று தெரியவரும்.

இதுதர்மம் இது அதர்மமென்று அறிந்துநடக்கின்ற நடுவுநிலைமையோர்கள் பிறர்பொருளை யிச்சிக்கவுடன் படார்கள். ஆதலால் இக்குணத்தையுடையவ னிடத்து மஹாலக்ஷ்மி நிரந்தரங்குடிகொண்டிருப்பள்.

பிறர்பொருளினிடத்துப் பேராசைகொண்டலைகின்ற வஞ்சகர்களுடைய செல்வம் விரிந்தகடல்போல மிகுந்திருந்தாலும் அது ஒ

ரிமைப்பொழுதில் நாஶமடையும்; ஆனால் அந்தப்பாவம்மாத்ரம் நெடுங்காலம் நிலைபெற் றிருக்கும்.

ஆசையென்பது கொடியதுர்க் குணமென்றும், அஃதின்மை பெரியநற்குணமென்று முணாக்கவேண்டி ஒருவித்வான் விளம்பிய தென்னவெனில், ஆசைக் கடிமையானவர்கள் உலகத்திற் கெல்லாம் அடிமையெனவும், ஆசையை அடிமையாக்கிக் கொண்டாவர்க்கு உலகமெல்லம் அடிமையெனவும் விளம்பினர்.

பேராசையென்பது மிகுந்தகெட்டகுணம்; ஏனெனில் அதனால் மனிதனுக்கு புத்திகெட்டுப்போகும் புத்திக்கேடு நேரிடுமாகில் முன்னுள்ளபொருளும் நாஶமடையும். இதற்குத்ருஷ்டாந்தமாக ஒருசின்னக்கதை சொல்லப்படுகின்றது.

அதாவது, பேராசையுள்ள ஒருகுடியானவனிடத்தில் ஒருஎருமை யிருந்தது; அது அவனுக்கு நாள்தோறும் ஒருபடி பால்கொடுத்துக் கொண்டிருந்தது. அவனதை யொருபணத்துக்கு விற்று ஜீவனம்பண்ணிக் கொண்டிருந்தான். இப்படி யிருக்கையில் ஒருநாள் அவன் நினைத்த தென்னவெனில், இந்த எருமைகொடுக்கிற ஒருபடி பாலினால் எனக்கு நித்யம் ஒருபணந்தான் கிடைக்கிறது; இதனால் என்தரித்ரம் ஒருபோதும் நீங்காது. ஆதலால் இந்த எருமையின் மடியையறுத்து அதற்குள் ளிருக்கிற பாலையெல்லாம் ஒருமிக்க விற்றுப்போட்டால் எனக்கு வெகுபணங் கிடைக்கும், என்று நினைத்து எருமையின் மடியை யறுத்துப் பார்க்குமளவில் அதில்ரக்தமும்மாம்ஸமு மாத்ரம் இருந்ததேயால்லாமல் வேறொன்று மில்லாமையால் அவன் வ்யாகுலப் பட்டழுதான். இதில் பேராசையும், அதினாலுண்டாகும் அவிவிவேகமும், அவ்வவி வேகத்தாலுண்டாகும் நஷ்டமும், விளங்கிய தன்மைகாண்க.

ஆகலால், வெஃகலென்னும் ஆசைக்கு அதிகமா யிடங்கொடாமல்வெஃகாமையை மேற்கொண்டு த்ருப்தியடைந்திருக்க வேண்டும்.

---

## செய்நன்றியறிதல்.

செய்நன்றி யறிதலென்பது ஒருவன்செய்த உபகாரத்தை மறவாமையாம்.

ஒருவன் பிறனாலே ப்ரதியுபகாரத்தை விரும்பாமலே செய்த உதவிக்குப் பூலோகத்தையுந் தெய்வலோகத்தையுங் கொடுத்தாலுமீடாகாது. ஏனெனில், ஒருவனுக்குத் தகுந்த காலத்தில் செய்தநன்றி சிறியதாக விருந்தாலும் அக்காலத்தை நோக்கும்போது அறிவுடையோரதைப் பெரிதாக நன்குமதிப்பார்களென்பதினாலேதான்.

ப்ரதியுபகாரத்தை விரும்பாமலே செய்த உபகாரம் கடலினும் பெரிதென்று சொல்லியதற்கு மேகமே ஸாக்ஷியாயிருக்கின்றது; எப்படியெனில், லோகத்துக்கு நன்மாரிபொழிந்து பாதுகாக்குந் தன்மை உள்ளமேகம் ப்ரத்யுபகாரத்தை விரும்பாத தன்மைபோலேதான்.

ஒருவன் துன்பமுற்றகாலத்தில அவனுக்குச்செய்த உதவி எவ்வளவு அற்பமாக விருந்தாலும், அவன் அதை எப்பிறப்பிலும் மறவாதிருப்பானாகி லவனை நன்றியறிந்த மஹாபுருஷனென்று நல்லோர்கள் புகழ்வார்கள்.

ஒருவனுக்கு ஒருகால் உபகாரமும், பின்பு அநேகம் அபகாரங்களுஞ் செய்யப்பட் டிருந்தாலும், அவன் அபகாரத்தை மறந்துவிட்டு உபகாரத்தை மாத்ரம் பெரிதாக வெண்ணி நடப்பானாகில் புருஷோத்தமனென்று சொல்லப்படுவான்.

ஒருவன் செய்த நன்றியையறிந்தும் அறியாதவன் போலிருந்துவிடுகின்ற நன்றிகெட்டவனுக்கு இஹத்திலும் பரத்திலுந்துக்க முண்டாவதற்கு ஸந்தேஹமில்லை.

ஆகலால் நன்றியறிதலைக்குறித்தும், நன்றியறியாமையைக்குறித்தும், பூஷணை தூஷணைகளாக இரண்டு கதைகள் சொல்லப்படுகின்றன.

## முதல்கதை.

ஒருபட்டணத்தில் ஒருவர்த்தகன் இருநூறுவராகன் கண்டெடுத்து அதைக்குறித்து ப்ரஸித்தப்படுத்தினான். அதைப்போக்கடித்துக் கொண்டவன் ஸமாசாரங் கேள்விப்பட்டுவர்த்தகன் வீட்டுக்குப்போய் வராகன் தன்னதென்று ருஜூப்படுத்தின பின்பு வர்த்தகன் அவன்கையில் வராகனைக்கொடுத்து விட்டான். அதைவாங்கிக்கொண்டவன் நன்றியுள்ளவனாதலால் மிகவும்ஸந்தோஷமடைந்து வர்த்தகனு

க்கு இருபது வராகன் கொடுக்கப்போனான். ஆனால் வர்த்தகன் தனக்குவேண்டாமென்றான். அவன்மறுபடி பத்துவராகனாவது வாங்கிக் கொள்ளவேண்டுமென்றான். வர்த்தகன் அதையும் வேண்டாமென்று தடுத்து விட்டபடியால் அவன் ஐந்துவராகனாவது வாங்கிக் கொள்ளவேண்டு மென்று நிர்ப்பந்தித்தான். வர்த்தகன் அதையுந் தடுக்கக்கண்டு பணம் போக்கடித்துக் கொண்டவன் மிகவுங்கோபமடைந்து தான்வாங்கிக் கொண்டவராகனைப் பையோடெறிந்துவிட்டு வர்த்தகனைப்பார்த்து, நீயோமஹாநிஜஸ்தன் உன்னுடைய ஸத்யமெனும் ஸுகுணத்தால் எனக்கு இந்தப்பணங்கிடைத்தது. நானும் நன்றியறியாதவனல்ல; ஆதலால் நீசெய்தநன்றிக்கு ப்ரதிசெய்யவிரும்புகிறேன். இந்தப்ரதியுபகாரத்தை நீகைக்கொள்ளாதபக்ஷத்தில் இந்தப்பணம் என்னதல்ல இதற்குடையவனாரோ அவன்கையில்கொடுத்துவிடு நான்போகிறேனென்றான். அதைக்கேட்டு வர்த்தகன் ஐந்து வராகன்வாங்கிக்கொண்டு உடனே அதைதர்மத்திற் செலவழித்துப் போட்டான்; ஆதலால், ஒருவன்செய்த உபகாரத்தைமறவாமல் கவனித்துக்கொண்டிருப்பதும், அதற்காகக் கூடுமானவரையில்ப்ரதியுபகாரஞ்செய்வதும், மிகவுஞ்சிறந்தஸுகுணமென்று யாவராலுங்கொண்டாடப்படும்.

## இரண்டாங்கதை

ஒருகுடியானவன் தனதுமுயற்சியால் கொஞ்சம்பணம்ஸம்பாதித்துக்கிழவனானபின்பு அதைத்தன்மகன்கையிற் கொடுத்தான். அவனதைக்கொண்டொரு வீடுந்தோட்டமும் தட்டுமுட்டுகளும்வாங்கிக் கொண்டு ஊழியக்காரரையும் வைத்துக்கொண்டு ஸுகஜீவனம்பண்ணிக்கொண்டிருந்தான். அப்போதும் அவன்தகப்பன் ஒருகுடிசையில் வாஸஞ்செய்துகொண்டும் உடைந்துபோன மண்கலத்தில் ஸாப்பட்டுக்கொண்டும் அதைத்தானேகழுவிக் கொண்டுமிருந்தான். அவனுடைய பேரப்பிள்ளை புத்திஸாலியாகையால் தன்பாட்டனுடையநிலைமையைப்பார்த்து வ்யஸனப்பட்டுச் சொல்லியதாவது. "நீ இப்போதும் இந்தஓட்டைக்கலத்திலேயே சாப்பட்டுக்கொண்டும் இதை நீயேகழுவிக்கொண்டும் இருக்கவேண்டுமா? இதை யுடைத்துப்போட்டால் உன்துக்கம் இதனுடன் நீங்கிப்போகுமே" என்றான். அத

ற்குக்கிழவறி இதைநான் உடைத்துப்போட்டால் உன்தகப்பன்கோ பித்துக்கொண்டு என்னையடிப்பானே என்றான் உடனேபேரப்பிள்ளை யும் அவனும் அனுகூலமாகிச்செய்த உபாயமாவது ஒருநாள் கிழவ ன் தன்மகனும்பேரனும் இருக்கையில் கலத்தைக்கழுவப் போகிற வன்போல் தாழப்போட்டுடைத்தான். உடனே பேரப்பிள்ளை ஒரு தடியெடுத்துக்கிழவனை யடிக்கப்போனான். அப்போது அவனுடை யதகப்பன் ஏண்டாபைத்தியக்காரா கிழவனையடிக்கலாமா வென்றான். நான் அப்படிதான் அடிப்பேன், ஏனென்றால் இந்தக்கிழவன் இ ந்தஓட்டைக்கலத்தை யுடைத்துப்போட்டானே இனி நீகிழவனாகும் போது உனக்குநான் இப்படிக்கொத்தகலம் எங்கேஸம்பாதிக்கமாட் டுவேன் என்றான். ஆதலால் அவனுடையகருத்தின்னதென்று தக ப்பனறிநதுகொணடு கிழவனைவீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோ ய்செவ்வையாய் வைத்துக்கொண்டிருந்தான். இதில் நன்றியறியாமை யின்தூஷணை விளங்குந்தன்மைகாண்க.

ஆதலால், யாவருந்தங்களுக்கு ச்செய்யபபடும் நன்றியையுண ர்ந்து தகுதியானப்ரதியுபகாரஞ்செய்யுந் தன்மையை மேற்கொண் டு நடக்கவேண்டும்.

வாய்மை யென்பது மெய்யினதுதன்மை இது காமக்குரோதங்க ளைப்பற்றி யுண்டாகும் பொய்மையை விலக்கும் நற்குணமாம்.

ஒருவன் தனக்குத்தெரிந்தது பிறருக்குத் தெரியாதென்று நி னைத்துப் பொய்சொல்லலாகாது. ஏனெனில் அப்பொய்மைவெளி யானபின்பு அதையறிந்த அவன்மனமே அவனைச்சுடுமென் றுரைத் திருப்பதினாலேதான்.

பொய்மையைப் பேசாமலும், அதைக்கருதாமலு மிருக்கின்றய தார்த்தவாதிகள் எப்போதும் பெரியோர்களுடைய இருதயகமலத் தைவிட்டு நீங்காதவர்களாக விருப்பார்களென்பதினாலே அவர்களு க்குக் கீர்த்தியும் யசஸு முண்டாயிருக்குமென்பது விளங்குகின் றது.

ஶரீரம் பரிசுத்தமாவதற்குஜலமேகாரணமாக விருக்கும். அது போல மனம் பரிசுத்தமாவதற்கு மெய்ம்மையேகாரணமென் றுணர வேண்டும்.

புறத்திருளை நீக்குவதற்குஸூர்யன்முதலாகிய ஜ்யோதிகள்ஹேது க்களாக விருப்பதுபோல, அகத்திருளை நீக்குவதற்கு மெய்ம்மை யென்னும் ஜ்யோதியே காரணமாக விருக்கும்.

மெய்ம்மையென்னும் ஸத்யத்தை வ்ரதமாகக் கொண்ட ஒருவன் சிறியவனுக விருந்தாலும் பெருமையடைவான். ஆதலின் அப்படிக்கொத்த யதார்த்தவாதி கேடுறும்படிக்கு அவனதுபகைவர் முயற்சிசெய்தாலும், அவனுக்கும் தெய்வம் ஸஹாயமாக விருந்து காக்குமெனக் கூறப்படுகின்றது.

ஒருவருக்குங் கொடுக்கப்படாத பொருளைக் கொடேனென்பதினுலே குற்றமில்லை. ஆனல் தன்னைநாடிவந்தவனுக்கு தன்னுலியன்ற வுதவியை யுடனேசெய்யாமல் இன்றைக்கு நாளைக்கென்று திருப்புவது கொடியபொய்ம்மையாதலால் அப்படிச்செய்யலாகாது.

பொய்யாமையென்பது நல்லோர்க்கியல்பாகவும், மெய்யாமையென்பது தீயோர்க்குஸ்வபாவமாகவு மிருப்பதெவ்வாறெனின், சர்க்கரைக்குத் தித்திப்பும், வேம்பிற்குக் கசப்பும், ஸ்வபாவமா யிருப்பது போலவாம்.

மனமும் வாக்குமொத்த மெய்ம்மையை வ்ரதமாகக் கொண்டவர்கள் தவத்தோடு தானமுஞ் செய்வாரைப்பார்க்கிலுஞ் சிறந்தவர்களாவார்கள்.

அதிகமாய் பொய்ம்மைக்கிடங் கொடுத்துக் கெட்டபெயர்பெற்றவனுடைய வாக்கில் அவஸாத்தாய்வரும் மெய்ம்மைக்கூட்டப் பெருமைபெருது. எப்படியெனில் ஸுராபாண்டத்தில் ச்யுதைத யென்னும் அம்ருத மிருக்கின்றதென்ருல் ஒவ்வாத் தன்மைபோலேதான்.

மெய்பேசுவதினுல் எவ்வளவுதுன்பம வருவதாக விருந்தாலும், நல்லோர்கள் அதைவிட்டுப்பொய்க் குட்படார்கள்.

பொய்பேசுவதினு லெவ்வளவு இன்பம்வருவதாக விருந்தாலும், ஸத்யவான்கள் இன்பத்தை விரும்பிப் பொய்பேச வறியார்கள்.

பிறிதோயிர்க்குந் தீமையைத்தராத சொற்களைச் சொலல் வாய்மையெனவும், குற்றமில்லாத நன்மையைப் பயக்குமாயின் பொய்ம்மையானுலும் வாய்மையோடொத்த தெனவுங் கூறப்பட்டிருப்பதைக்குறித்து புத்திமான்கள் கொள்ளவேண்டிய கருத்தென்னவெனில்,

பொய்ம்மையால் நன்மையுண்டாகுமாயின் அது தீங்குசெய்யும் பொய்ம்மையைப் பார்க்கிலும் நலமென்பதுமாத்ரமே யல்லாமல் வேறில்லை.

ஆதலால், யாவரும் மெய்ம்மைதவறுமலும், பொய்ம்மைக்கிடங் கொடாமலு மிருக்கவேண்டும்.

---

# அறன்வலியுறுத்தல்.

மறுமையில் மோக்ஷத்தையும் தேவத்வத்தையும் தருவதாகிய தர்மத்தைவிட மிகுந்தசெல்வம் வேறொன்று மில்லையாதலால், தர்மத்தினிடத்து புத்தியை நிலைநாட்டிக் கொண்டிருக்கவேண்டும்.

தர்மாநுஷ்டானத்தைப் பார்கிலும் மேற்பட்ட செல்வமொன்றுமில்லையென்றும், காமவெகுளி மயக்கத்தால் அதைமறந்து விடுவதினாலே யுண்டாகிய கெடுதியைப் பார்க்கிலும் வேறொரு துன்பமில்லையென்றும், முன்னோர்க ளுரைத் திருக்கிறார்கள்.

நற்சிந்தை நற்செயல் என்பவைகளே ஒருவனுக்கு தர்மமாகிய நல்வினைகளென்றும், அவைகட்கு விரோதமானவைகளே அவனுக்குத் தீவினைகளாகிய அதர்மங்க ளென்றுஞ் சொல்லப் பட்டிருக்கின்றன.

பேராசை கோபம் கடுஞ்சொல் ஆகிய மூன்று குணங்களையும் ஒருவன் தன்னிடத்துவந்து சேரவொட்டாதபடி துரத்திவிடுவதில் அசமர்த்தனாகவிருப்பானாகில் அவனிடத்தில் அதர்மம் நிரந்தரங்குடிகொண்டிருக்கும்.

உயிர்க்குத்துணை தர்மத்தைவிட வேறொன்று மில்லையென்று சொல்லி யிருப்பதால், அதைமறவாமல் உடனேசெய்யவேண்டும்; ஏனெனில் அதை அந்த்யகாலத்திற் செய்வோமென்று நினைத்தா லக்காலத்தில் நமதுபுத்தி எவ்விதத்தன்மையி லிருக்குமோ அறிந்திலேமென்பதினாலேதான்.

தர்மத்தின்பய னித்தன்மை யுடையதென்று நூல்களைக் கொண்டு அறியவேண்டியதே யில்லை. ஏனெனில் சிவிகையைச் சுமக்கி

ன்றவனையும் அதிலேறுகின்றவனையும் பார்த்தால் அநுபவமாகத் தெரிந்து கொள்ளலாகுமென்பதினாலேதான்.

நாம் நல்வினையினாலே ஸுகத்தையும், தீவினையினாலே துக்கத்தையும், அனுபவித்துக்கொண் டிருக்கிறோமென்று நமக்கேபூர்த்தியாய்த்தெரிந் திருக்கின்றது. ஆதலால், இவ்விருவினையில் நல்வினையென்னுந் தர்மத்தை இடையூறில்லாமல் நடத்திவருவோமாகில் அது பிறவித்துன்பத்திற்குக் காரணமாகிய தீயவழிக்கு ஒருதடைகல்லாயிருக்கும்.

ஓ மனமே, அநித்யமான ஶரீரத்தை ஶதமென்று நம்பி தர்மத்தைச்செய்யமறந்தாய் இறந்துபோவோமென்பதைச் சற்றாயினுங் கருதாமற்போனாய் ஶதமல்லாதவாழ்வை யெந்நாளும் ஶதமென்று நினைத்தாய் இவ்விதநினைப்புள்ள உன்மீதுயமன் திரும்புவானாகில் அப்பொழுதென்ன தர்மத்தைச் செய்யமாட்டுவாய்?

ஓ ஜனங்களே, நம்மிட்பிடரியினிடத்து எப்போதும் யமன்குடிகொண்டிருக்கிறானென்று அறியுங்கள் அதையறிந்தால் நாமெடுத்தஜடலம் இன்றைக்கோ நாளைக்கோ எப்பொழுதோ விழுந்துபோய்விடுமென்கிற நினைப்புக் கிடமுண்டாகாமற் போகமாட்டாது. ஆதலால் பொல்லாங்கான கார்யங்களுக் கிடங்கொடாமல் விட்டுவிடுங்கள். அவரவர்களுக்கியன்றமட்டும் நல்விஷயத்தில் சீக்ரத்தில் தர்மங்களைச் செய்து கொள்ளுங்கள். விழிக்குக்காணப்படும் எல்லாப்பொருளும் நசித்துவிடுமென்றும், தர்மமொன்று மாத்ரமே அழிவில்லாமல் நிற்குமென்றுஞ் சொல்லிய நீதியைக் கருதி நடவுங்கள். ஆலஸ்யமாக விருந்துவிட்டால் வ்யஸனப்பட வேண்டியதாக வரும்.

ஓ மூடர்களே, ஆலம்விதை மிகவுஞ்சிறியதாக விருந்தாலுமதை நல்ல நிலத்திலே முளைப்பிக்கச்செய்தாலது பெரியவ்ருக்ஷமாகிவிஶாலமாகப் படர்ந்து அதனை யடுத்தவர்களுக்கு நிழலைக்கொடுத்து ஆதரிக்கு மதுபோல ஶுத்தாத்மாக்களாகிய நல்லோருக்கு தர்மமாக கொடுக்கும் பொருள் எவ்வளவு அல்பமாக விருந்தாலும் அது ஆகாஶத்தைப்போல விரிவாகி யதைக்கொடுத்தவனை கதியென்னும் மோக்ஷத்தையடைவிக்கும் என்கிற நீதிவசனத்தைக் கவனித்து அந்தப்படிநடக்க முயற்சிசெய்யுங்கள்.

தினந்தோறும் ஸூர்யனுதயமாகிறதையும், அஸ்தமிக்கிறதையும் பார்த்துக் கொண்டிருந்தாலு மதைப்பொழுதுவிடிகிற தாயும்பொழுதுபோகிறதாயும் நினைத்து ஸந்தோஷப் படுகிறோமேயல்லது அதனுல் நமதாயுள் செல்லுகிற தென்றறியாமல் நமக்கு நூறுவயதுண்டா யிருக்கிறதாய் நினைத்து நெடுநாள் வாழ்ந்திருக்கலாமென்று களிகூர்ந்து கொண்டிருக்கும் போதே நமதாயுள்மீது யமன்திரும்பி விடுவானுகில் நாமடைந்த ஸந்தோஷ மெங்கே போய்விடும்? இதையோசித்தால் முன்னுடியே தர்மத்தைச் செய்ய வேண்டுமென்று தெரியவரும்.

ஆகலால், உயிர்க்கு மறுமைத்துணையாகிய தர்மத்தை மறவாமல் அதிலேயே முயற்சிசெய்து கொண்டிருக்க வேண்டும்.

---

# இல்வாழ்க்கை.

இல்வாழ்க்கை யென்பது அதிதி முதலானவர்களுக்கு உதவிசெய்து இல்லாளோடு கூடிவாழ்ந் திருப்பதேயாம். இதுதான் க்ரஹஸ்தாஸ்ரமம்.

ப்ரஹ்மசாரி வானப்ரஸ்தன் சந்யாஸி இவர்களுடைய ஒழுக்கத்திற்கு பங்கம்வராமல் அவர்களுக்கு உபகாரஞ் செய்வதிலும் அவர்களுக்குப்பசி நோய் குளிர் முதலானவைகளால் இடர் வரவொட்டாத படிக்கு அவர்களை ஆதரிப்பதிலும், கவனத்தை யுடையவனே இல்வாழ் வோர்களில் சிறந்தவனென்று சொல்லப்படுவான்.

பித்ருக்கள் தேவர்கள் விருந்தினர் சுற்றத்தார் தான் என்னும் ஐவகையாருக்கும் வேண்டியவைகளை விதிப்படி கொடுத்து வருகின்ற செய்கையே இல்லறத்தானுக்குச் சிறப்புடைய தர்மமாம்.

பாபத்திற்கஞ்சி ஸம்பாதித்த பொருளைத் துறந்தவர்க்கும் பசித்தவறியவர்க்கும் சுற்றத்தார்க்கும் பகர்ந்து கொடுத் துண்பதும், இறந்துபோனவர்களுக்கும் பித்ருக்களுக்கும் நீர்க்கடன் முதலானகர்மங்களைச் செய்வதும், இல்லறத்தானுக்குக் கடமையாம். இவ்விதியைத்தப்பாமல் நடத்துவோன் மறுமையில் ஸ்வர்க்கத்தில் நிலைபெற்றிருப்பான்.

தன்மனைவியி னிடத்து வைக்கவேண்டிய அன்பு இவ்வளவெ ன்றும், அதிதிமுதலானவர்களுக்குப் பகுத்துண்ணுதலாகிய தர்மத் தின்பகுதி யிவ்வளவென்றும், அறிந்து நடத்தும் இல்லறத்தானுக் கு இஹபரங்களிரண்டிலும் நன்மையுண்டென்றும், அப்படி நடத்த வறியாதவன் இல்லறத்திலிருந்தாலும் அவனுக்குப்பயனும் பண்பு மில்லையென்றுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது.

இல்வாழ்க்கைக்குப் பழுதின்றி நடத்துவோன் ஐம்புலன்களையு ம் அடக்கித் தபம்புரிகின்ற பெரியோர்களிலுஞ் சிறந்தவனுவானெ ன்கிற தத்வம் முன்னோர்களாலே சொல்லப்பட் டிருக்கின்றது.

தவத்தையுடைய பெரியோர்கள் அவர்களுடைய நெறிவழுவாம லிருப்பதற்கு வேண்டிய உபகரணங்களை அளிப்பதில் மனவெறுப் பில்லாம லிருப்பவன் இல்லறவாஸியாயிருந்தாலும் தவத்தையுடை யவனென்றே சொல்லப்படுவான்.

மாநுஷஜன்மத்தைப்பெற்ற ஒருவன் இல்வாழ்க்கையி லிருந்தா லும், அந்நெறிதவறாம லிருப்பானுகில் தெய்வலோகத்தில் தேவர்க ளிலொருவனுக விளங்கியிருப்பான். எப்படியெனில், இல்லறநெ றி தவறாதவனுக்கு ஸ்வர்க்காதி போகமுண்டென்று சொல்லியிருப் பதினுலேதான்.

ஆதலால், யாவரும் இல்லறத்திற்குரிய நெறிதவறாமல் நடக்க வேண்டும்.

---

## கற்பு அல்லது வாழ்க்கைத்துணை நலம்.

கற்பென்பது – பெண்டிர்க்குரிய கலங்காநிலைமையாம். வாழ் க்கைத்துணைநலமென்பது இல்வாழ்க்கைத் துணையாகியதர்மபத்னி யினது நன்மையாம். இக்குணங்களையுடைய தலைவிபதிவ்ரதையெ னப்படுவள். இவளுடைய தன்மைதான் பாதிவ்ரத்ய மெனப்படும்.

இல்வாழ்க்கைக்குத்தக்க நற்குணநற்செய்கைகளை யுடையவ ளாயிருப்பதுமன்றிக் கணவனது ஸம்பாத்யத்திற்குத் தக்கசெலவு செய்துவருகிறவளே வாழ்க்கைக்குத் துணையாவாள் என்பதில் நற் குணநற்செய்கைக ளென்பதின் கருத்தென்னவெனில், துறந்தோ

ணையுபசரித்தல், விருந்தாராய்தல், வறியவரிட்டத்தருளுடைமை, முத லாகியகுணங்கள் நற்குணங்க ளெனவும், வாழ்க்கைக்கு வேண்டு ம் பொருள்களை சேகரித்துக்காத்தல், உண்டிசமைத்தல், உபகாரஞ் செய்தல், முதலானவைகள் நற்செய்கைகளெனவுங் கூறப்பட்டிருப் பதுதான்.

ஒருவனதுமனையாளிடத்தில் கற்புக்குத்தக்க நடக்கையும் இல் லறத்திற்குத் தகுந்த செய்கையு மில்லாதிருக்குமாகில் அவ்வில்வா ழ்க்கை செல்வத்தா லெவ்வளவுசிறப்படைந் திருந்தாலும் பயன்படா மல் இகழ்ச்சிபெற்றுத் தாழ்ச்சியடையுமென்று சொல்லப்பட்டிருக் கின்றது.

ஒருமனைவியினிடத்துக் கற்புக்குத் தக்கநன்னடத்தை குறைவி ன்றி பூர்ணமாக விருக்குமாகில் அவள்வளவில் வாழ்க்கைக்குவேண் டிய உபகரணங்களொன்று மில்லாதிருந்தாலும் எல்லாமுண்டாயிரு க்கக்காணலாகு மென்றும், நன்னடத்தையில்லாமலும் நிறையில்லாம லு மிருக்கின்ற மனைவியின் இல்லத்தில் எல்லா உபகரணங்களும் விஸ்தாரமாக விருந்தாலும் ஒன்றுமில்லாததாசக் காணப்படுமென் றும், சொல்லிய நீதியை இப்போதும் நாமனுபவமாகக் காண்கி ரோம்.

குற்றமற்ற மனசையும், கற்புக்குக்குறைவில்லாத நடத்தையை யு முடைய பெண்ணைத் தாரமாகப்பெற்றவன் எவ்வளவுதரித்ரனாகவி ருந்தாலும் பாக்யவானென்றே சொல்லப்படுவான்.

ஒருமனையாள் தன்கற்பைக்காப்பாற்றிக் கொள்வதிலும், தன்நா யகனது ஏவற்பணிவிடையிற் குறைவின்றி நடப்பதிலும், இனிய சொற்களால் புருஷனை ஸந்தோஷிப்பித்துக் கொண்டிருப்பதிலும், மிகுந்த ஜாக்ரதையா யிருப்பாளாகில் அவளை மஹாபுண்யவதியெ ன்று உலகம்புகழும். ஆகலால்இதற்கு விரோதமான நடையுடையவ ள் புகழ்ச்சிபெறுமல் இகழ்ச்சிபெறுவாள்.

கடவுளைத்தொழாமல் கணவனையே கடவுளிலுஞ் சிறந்தவனா கவெண்ணித் தொழுகின்ற மஹாபதிவ்ரதையினது வாக்கிற்பிறக் குஞ் சொற்களின் பொருள்முழுதும் அப்படியே நிறைவேறும்படி

யான மஹிமை அவளுக்குண்டென்பதற்கு "பெய்யெனப் பெய்யுமழை" என்றுரைத் திருப்பது போதுமான நிதர்ஶனமாக மாட்டாதோ?

ஒருவன் தன்மனைவியைக் காவலென்னுஞ் சிறையில் பத்ரப்படுத்திக்காத்து வந்தாலும் அவள் நிறையில்லாதவளாக விருப்பாளாகில் பயன்யாதொன்றுமிராது. ஆகலால் ஸ்த்ரீகளுக்கு நிறையாகிய கற்பே முதன்மையான காவலாக விருக்கவேண்டியது.

ஒழுக்கம் நாணம் மானம் நிறை யென்னும் நாற்குணங்களையுடையமனையாளே வாழ்க்கைக்குத் துணையாவாள். இக்குணங்களில்லாத இல்லாளைப்பெற்ற புருஷனது வாழ்க்கை பாழிடங்களில் வாழும் கோட்டானது வாழ்க்கைபோலாகும்.

பெண்பிள்ளைகட்குச் சிறையைப் பார்க்கிலும் நிறையேகாவலென்பதற்குப் பொருள் விவரிக்கப்படுகிற விதமாவது, சிறையென்பதினால் மதிற்காவல் வாயிற்காவல் முதலானவைகளும், நிறையென்பதினால் மனதைக் கற்பின்வழியில் நிறுத்தலும் விளங்குகின்றன வாதலால், நிறைக்காவலே முக்யமானதென்றும் அஃதில்லாவிடின் சிறைக்காவல் பயன்படாதென்றும் இந்தநிறையுள்ளவளே தர்மபத்னியென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

பெண்பிள்ளைகள், புருஷனைக்கண்ணெடுத்துப் பாராமல் தலைவணங்கி நடப்பதே அவர்களுடைய ஶிரஸிற்கு பூஷணமெனவும், கணவனுடைய நடையையநுஸரித்து நடப்பதே கால்களுக்கு ஆபரணமெனவும், அவனுக்குப் பணிசெய்வதே கைகளுக்கு அணிகலமெனவும், அவனது கட்டளையைக் கேட்டு நடப்பதே செவிகளுக்கு கர்ணபூஷணமெனவும், கூறப்பட்டிருப்பதால் இக்குணமுள்ள தர்மபத்னிக்கு ஆபரணமொன்றுமில்லா விடினும் அவள்ஸர்வாபரண பூஷிதையான மஹாலக்ஷ்மிபோல் விளங்குவது மல்லாமல் அவளது வாக்கிற்பிறக்கும் மதுரவசனங்களால் ஸரஸ்வதீ விலாஸம்பெற்றவளாய்ப்ரகாஶிப்பாள்.

புருஷனுக்குப் பணிசெய்வதில் அடிமைபோலவும், ஆலோசனைசொல்வதில் மந்த்ரி போலவும், முகவிலாஸத்தில் மாஹலக்ஷ்மி

போலவும், அழகிலுமையவள் போலவும், பொறுமையிற் பூமிதேவி போலவும், அன்பில்தாய்போலவும், கற்பில் அருந்ததிபோலவும், வாக்கில்ஸரஸ்வதி போலவும், கணவனதுஶயனத்தில் வேஶ்யையைபோலவும், இருக்கின்ற பெண்ணைத்தான் தர்மபத்னியெனச் சொல்லவேண்டும்.

ஆதலால், பெண்பிள்ளைகள் கற்பென்னுங் கலங்கா நிலைமையை மேற்கொண்டு நடக்கவேண்டும்.

---

## பிறனில்விழையாமை.

பிறனில்விழையாமை யென்பது பிறர்மனையாளை விரும்பாமையாம்.

தர்மஶாஸ்த்ரங்கள் முதலாகிய ஸச்சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களை யறிந்து அவ்வழிக்கு மாறுபாடில்லாமல் நடக்கின்ற அறிவுடையோர் ஒருவர்க் குடைமையாக விருக்கும் மனையாளிடத்து இன்பத்தை யநுபவிக்க ஒருபோதும் மனவிருப்பங் கொள்ளார்கள். ஒருவேளை யப்படிக்குச் செய்வார்களாகில் அவர்களுக்குள்ள ஶாஸ்த்ரவுணர்ச்சியால் பயனில்லையென்பது மல்லாமல், பகை பாவம் அச்சம் குடிப்பழி என்னும் நான்கு குற்றங்களும் அவர்களுக்குண்டாகும்; இதினால் அவர்களுக்குள்ள இம்மைமறுமைப்பயன்கள் கேடுறும்; இதற்குநிதர்ஶனமென்னவெனில், ராவணன் தனக்குள்ள மேன்மைகளை யிழந்து தானுமிறந்து இந்நாள்வரையில் வசைபெற்றிருப்பதுவேயாம்.

பிறர்மனையாளை விரும்பி அவள்வாயிற்படியினிடத்து ஶுநகம்போல் காத்திருக்கும் காமாதுரனுக்கு எப்பொழுதும் அச்சமே மிகுதியாகவிருக்குமாதலால் இன்பத்தை யநுபவித்தற் கிடமிராது. இதையுணர்ந்தும் விளக்கொளியை யிச்சித்திறக்கும் விட்டில்போல் பரஸ்த்ரீகளின் கவலையால் ஏன்இறக்க உடன்படுகிறார்களோ தெரிந்திலேம். இப்படியிறந்துபோனாலும் இந்தப்பழியும் பாபமுமாத்ரமிறவாமல் எப்போதும் நிலைபெற்றிருக்கு மென்பதற்கு ஸாக்ஷியென்னவெனில், பாண்டவர்களுடைய பத்னியாகியத்ரௌபதியினிடத்து

மயல்கொண்ட கீசகனிறந்தானென்பதும் அந்த அபகீர்த்தி நாளது வரையிலுமவனைத் தொடர்ந்துகொண் டிருப்பதுந்தான்.

மனதினிடத்து ஐயங்களைப்பற்ற ஒழித்துவிட்ட நல்லோருடைய மனைவியைத்தாயாக பாவிக்கவேண்டிய தர்மத்தை நினையாமல் காமமிகுதியால் அவளது ஆலிங்கனத்தை விரும்பியவன் அருநரகுக்காளாவ னென்றும், அவனுயிருடனிருந்தாலும் செத்தசவபத்தோடொப்பாவ னென்றுஞ் சொல்லிய வசனத்திற்கு ஸாக்ஷியென்னவெனில், ப்ரஹஸ்பதிபகவானுடைய பத்னியாகிய தாரையென்பவள் தன்கணவனிடத்து வித்யார்த்தியாக விருந்த சந்த்ரனை விரும்பி யுடன்பட்டாளென்று சொன்னபோதிலும் குருபத்னியென்கிற வுணர்வின்றி தர்மத்தைமறந்து அவளிடத்தில் இன்பத்தை யநுபவித்ததனால் அவனுக்கு வந்தபழியும் பாபமும் இன்னும் நீங்கவில்லையென்பதேயாம்.

ஒருவன் எவ்வளவு செல்வத்தையுஞ் சிறப்பையு முடைத்தாயிருந்தாலும், காமாந்தகாரத்தினலே பிறனுடைய மனைவியை முறைவழுவாக விரும்பினல் அதனல்விளையுங்குற்றத்தை அவனப்பொழுதே யநுபவிப்பானென்பதற்கு ஸாக்ஷிஜேஷிபத்னியாகிய அஹல்யையையிச்சித்ததேவேந்த்ரனடைந்த இழிவைவிட இன்னுமென்னசொல்லவேண்டும்?

ஒருவன் தனக்குள்ள செல்வச்செருக்கினலேயும் வலிமையினலேயும் பிறனுடையமனைவியை வசப்படுத்திக் கொண் டின்பத்தையநுபவித்து வந்தாலும் அதனல்வரும்பாப மவனைத்தொடர்ந்து நின்று கெடுக்கும். அஃதெப்படியெனில், வாலிதன்வலிமையால் தன் ஸஹோதரனகிய ஸுக்ரீவனுடைய பார்யையை வசப்படுத்திக்கொண்டு இன்பத்தை யநுபவித்துவந்தாலும் அப்பாபமானது அவனது ப்ராணனை ராமனுடைய பாணத்திற் கிரையாக்கிவிட்டது பொய்யல்லவாதலா லிதையுணர்ந்து பிறன்மனையாளிடத்து மோஹங்கொள்ளாதிருக்க வேண்டுமென்பதே நீதியாம்.

தர்மமாகிய நற்கார்யத்திலேயே மனதையுள்ளாக்கிக் கொண்டிருக்குமொருவன் அயலவன் மனைவியினிடத்து இன்பத்தை யநுபவிக்க எவ்வளவும் உடன்படான். இவ்விதநிலையிலிருந்து வழுவாதிரு

ப்பதினுலே அவன் இல்லறத்தோர்களில் மேன்மையானவ னென்று புகழப்படுவான்.

பிறர்மனையாளைக் கனவிலும் நினையாதவனே ஆண்மைத்தன்மையுடைய குணவானென்று சொல்லப்படுவான். இந்ததர்மம் ஒன்றுமாத்ரமே அவனையடைந் திருக்குமோவென்றால் இல்லை, எல்லாதர்மமுமவனை யடைந்திருக்குமென்று முன்னோர்க ளுரைத்திருக்கிறார்கள்.

பிறர்க்குரிய ஸ்த்ரீகளின் தோள்களைச் சேரவுடன்படாத புத்திமானிடத்துக் கடல்சூழ்ந்த பூமியினிடத்துண்டாகிய எல்லாச்செல்வமும் முயற்சியில்லாமலே வந்து சேருமென்று நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

தர்மத்தைச் செய்யக்கனவிலும் நினையாத ஒருவன் பாபங்களையே செய்கின்றானாலும் அவன் பிறன்மனையாளை விரும்பாதிருப்பானாகில் இந்ததர்ம மொன்றினாலேயே அவன்செய்தபாபமெல்லா மொழிந்து நன்மையுண்டாகு மென்பது நீதிநூலோர்களால் சொல்லப்பட்டிருக்கின்றது.

பிறனுடைய தாரத்தைவிரும்பி அதிலேயே ப்ரமைகொண்டலைகின்ற ப்ரஷ்டனுக்கு ஹிம்ஸை அதிகமாயும் இன்பம் அல்பமாயும் மிருக்கும். ஆனலதனால் நேரிடும் அபகீர்த்தி மாத்ரம் எந்நாளு மவனைவிட்டு நீங்காமல நிலைத்திருப்பது மல்லாமல் அவனுக்கு பிரிழக்கும்படியான பொல்லாத காலமும் நிஶ்சயமாய்வந்து லபிக்கும்.

அந்யனுடைய பத்னியினிடத்து விருப்பங் கொண்டிருப்பவன் எவ்வளவு த்ரவ்யவானாக விருந்தாலும் அவனிடத்து தர்மம் கீர்த்தி பெருமை இவைமுதலாகிய நற்குணங்கள் அணுமாத்ரமும் பொருந்தியிராதென்றும், பகை பழி பாவம் அச்சம் இவைமுதலாகிய தீயவைகள்மாத்ரம் நிரந்தரங்குடி கொண்டிருக்கு மென்றுஞ் சொல்லியநீதி ஸரியாகக் காணப்படுகின்றது.

அயலவன் மனைவியினிடத்து இன்பத்தை யநுபவிப்பதின் பொருட்டு வெட்கத்தையும் நாணத்தையும் விட்டுச்செல்வோனை அயல்ஜனங்கள்கண்டு ஹேளனஞ்செய்யினும் உணர்வில்லாமல் அக்கெ

ட்டகார்யத்தையே செய்வானானாலும் பலநாளாய் அநுபவித்துவந்த இன்பம் ஒருநாளையில் உயிரிழக்கும்படியாகச் செய்துவிடும்.

ஆகலால், பிறன்மனையாளை விரும்புவதி லுண்டாகும் பலவிக்கட்டுகளுக்குடன் படாமல் நல்விஷயத்தில் ஸுகத்தையநுபவிப்பதே நலமென்றுணர வேண்டும்.

---

# வரைவின்மகளிர்.

வரைவின்மகளிரென்னு மிவ்வதிகாரத்தின் விஷயமென்னவெனில், நல்லோர் தீயோரென்கிற வரைவின்றிப் பொருள் கொடுப்போர்க்கெல்லாம் பொதுவாக ஶரீரத்தைப் பயன்படுத்தும் வேஶ்யர்களினியல்பேயாம்.

விளக்கினொளியும் வேஶ்யர் உறவும் ஸரியாகவுபமிக்கப் பட்டிருக்கின்றது; அஃதெப்படியெனில், தகளியிலிட்ட நெய்போய்விடுமாகில் அதனிடமாய்விளங்கிய விளக்கினொளியும் போய்விடும் இதுபோலவே ஆடவரிடத்துப் பொருள் குறைந்தால் வேஶ்யர்க் குறவுகுறைந்துவிடும்.

வேஶ்யரிடத்து தேவேந்ரன் வந்தாலும் பொருளில்லாமை காண்பார்களாகில் அவனுக் குபசாரஞ்சொல்லிப் போகச்சொல்வார்கள் அப்படிக் குபசரித்துப் போகச்சொல்வதே னென்றால், அவன் பணமுடையவனாகவரும்போது தங்களைத்தேடி வரவேண்டு மென்பதினாலேதான்.

நன்மையற்ற நெஞ்சினையுடைய வேஶ்யர் பொருளில்லாத ஆடவன் எவ்வளவுகுணவானாகவிருந்தாலும் அவனைமதியார்கள், பொருளுள்ளவனையோவென்றால் அவன்கொடுப்பது கொஞ்சமாக விருந்தாலும் அவனதுபாக்யம் குபேரஸம்பத்தென்றும் அவன்தாதருத்வத்தில் கர்ணனென்றும் புகழ்வார்கள்; ஏனெனில், கொஞ்சங்கொஞ்சமாயாகிலும் அவன்பொருள் முழுமையும் அபஹரிக்கலாமென்கிற கருத்தினாலேதான்.

மேலும் அவன்பரமதுர்க் குணியாயிருந்தாலும் அவனைகல்யாணகுணபூர்ணனென்று துதிப்பார்கள். குரூபியாயிருந்தாலும் ம

ந்மதனுக் கொப்பானவனென்று சிறப்பிப்பார்கள். அவன் நாகரீக மில்லாத மூடனுகவிருந்தாலும் களாஶாஸ்த்ரங்கற்ற ஶ்ருங்காரஶேக ரனென்று கொண்டாடுவார்கள். இப்படிக்குக் கபடஞ்செய்து பொருளை வஞ்சிக்க விரும்பிய நாயகிக்கு நாயகனிடத்தி லெவ்வளவு அன்புண்டாயிருக்குமோ அதைபுத்திமான்கள் யோசித்துக்கொள்வார்கள்.

அன்பினது பற்றினல் விருப்பங்கொள்ளாமற் பொருட்கவர்ச்சியினல் விருப்பங்கொள்ளுகிற விலைமாதருக்குரிய வஞ்சனையும், அதனற்பிறக்கு மின்சொலுரைத்தலும், விளக்கமாகத் தெரிந்திருந்தும் அவர்களிடத்து மோஹங்கொண்டு ஸுகமநுபவிக்க விரும்பியவன் மூடரிலும் மூடனவான்.

வேஶ்யர்களுடைய இனியசொற்களால் மயங்கிய ஆடவர்தத் காலத்தி லின்பமுற்றாலும் பின்பு பொருளிழந்து உடல்மெலிந்து கனங்குறைந்து வருந்துவராதலால் அவ்வின்பங்கொள்ளலாகாது.

பொருள் கொடுக்கின்ற தாதாவினிடத்தில் அன்பில்லாமல் பொருளினிடத்தில் மாத்ரம் அன்புவைத்திருக்கும் வேஶ்யர்களெப்படிக்கொத்தவரென்றல், கூலிக்காகப் பிணமெடுக்க உடன்பட்டவர்கள் போலாவார்கள்; ஏனெனில், கூலிக்குப்பிணமெடுக்க வந்தவனுக்குப் பொருள்மேல் விருப்பமிருக்குமே யல்லது பிணத்தின்மேல் விருப்ப மிராதென்பதினலேதான்.

பொருட்பொருளை மாத்ரம் விரும்பி மற்றபொருள்களை யிகழாநின்ற வேஶ்யருடைய ஶயனத்தை அருட்பொருளை யாராய்ந் தீட்டிய புத்திமான்கள் ஒருபோதும் விரும்பார்கள்.

ஒருவன் ஜாதிஹீனனுயும், வயோவ்ருத்தனுயும், குரூபியாயும், மிகவும அருவருப்பான பலரோகங்க ளுள்ளவனுயு மிருந்தாலும், பொருள்கொடுப்பானுகில் வேஶ்யர்கள் அவனேடு புணர வுடன்படுவார்களென்பது யாவர்க்குந் தெரியுமே, அப்படிக் கொத்தர்வகளுடையஶயனத்தை விரும்புகின்ற புருஷனுடைய புத்தி யெப்படிக்கொத்ததாக விருக்கவேண்டுமோ அதையூஹித்தறியலாமென்று விவரிக்கவில்லை.

ஒருபுருஷனிடத்தில் நற்குணமொன்று மிராமற்போனாலும் பொருளிருந்தால் வேஸ்யர்கள் இன்பங்கொண்டவர்கள்போல் அபி நயிப்பார்கள். நற்குணங்கள் எத்தனையிருந்தாலும் பொருள் மாத்ரம் இராமற்போகுமானால் அவனிடத்திலெவ்வளவு மின்பங்கொள் ளார்கள், ஆதலால் அவர்களுடைய மோஹம் பொருளையே ஆதார மாகக் கொண்டிருக்கின்றதென்பது ப்ரகாஸமாய் விளங்குகின்றது. அவர்கள் ஆடவரைப்பார்த்துரைக்கும் இன்பமான வசனங்கள் யாவும் கபடமென்பதும் விளங்காமற்போகாது.

நல்வழியில் ஸம்பாதித்த நற்பொருளை வேஸ்யராகிய துர்ஜன ருக்குபயோகப்படுத்த நற்குலத்திற் பிறந்த மேன்மக்களொருபோது முடன்படார்களென்பது அநுபவமாயிருக்கின்றது.

அறிவு ஒழுக்கம் இவைமுதலாகிய நற்குணங்களால் அடைந்தபுகழை, ஆடல் பாடல் அழகு இவைகளால் செருக்கடைந்து தங்கள் புன்னலத்தை விலைகொடுப்போருக்கெல்லாம் கொடாநிற்கின்ற வேஸ்யருடைய ஆலிங்கனத்திற்காக இழக்க உடன்படுகின்றவர்கள் குடிப்பிறப்பில் தாழ்ந்தவரெனவும், கல்வியறிவிற் குறைந்தவரெனவும், இகழப்படுவார்களென்பதற்கு ஐயமுண்டோ?

பலவிதத்திலும் இகழ்ச்சி பெற்றவர்களென்றும் பெருமைபெற்றவர்களென்றும் பேதமறியாமல் பொருளைமாத்ரமே யிச்சித்து அவர்களோடு கூடும் வேஸ்யரது மாஆலிங்கனம் ஆலிங்கனமல்ல மற்றென்னெனில் அவ்வறிவிலாத கீழ்மக்கள் அழுந்தும் அளறெனும் நரகமாம்.

ஆதலால், வரைவின்மகளிரென்னும் வேஸ்யர்களுடைய தோள்களைப்பொருந்த விரும்பாதிருக்கவேண்டும்.

---

## இரவச்சம்.

இரவச்சமென்பது மானத்திற்கு இழிவுவரும்படியான இரத்தலுக்கு அஞ்சுதலாம்.

ஒருவனுக்குக்கடவுள் அளித்த அவயவங்களும் புத்தியுக்திகளும் செம்மையாயிருக்கையில், அவைகளைக் கொண்டுசெய்ய வல்ல

தாகிய ஓர் முயற்சிசெய்து ஜீவனமியற்றாமல் மானத்தை விட்டுஇரக்கத்துணிந்தவனுக்கு நேரிடுங் குற்றமென்னவெனில் கடவுளளித்த பொருள்களை வீணிற்போக்கியதும், முன்னோர்கள் பெற்ற பெருமையை யிழப்பதுந்தான்.

மனிதருக்கு ஆயுளும், அதற்குவேண்டிய வுண்டியும், அதற்குரிய முகாந்தரமும், ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரமெனும் மூன்று தொழிலுக்குங் கர்த்தாவாகிய கடவுளினாலே அமைக்கப்படுமென் றுரைத்திருக்கிறபடி சிலமனிதருக்கு இரத்தலே முகாந்தரமாகக் கற்பிக்கப்பட்டிருக்குமென்று சொன்னால கடவுளையும் பழிக்குட்படுத்தி நிந்தித்த பாவம் வருமென்பதற்கு ஐயமில்லை.

இரவென்பது வறுமைதீர்தற்கு வழியென்று சொல்லப்படுமாயின் அது கீழ்மக்களுடைய புன்மொழிவாக்யமென் றிகழப்படும் ஏனெனில் வறுமைதீர்தற்கு நல்வழி முயற்சியெனவும், அஃதல்லாது இரத்தல் மானங்கெடும்படியான கீழ்மையெனவுங் கூறப்பட்டிருப்பதை யார்தான் அநுபவத்திற்கொத்ததாக நினையார்கள்.

இரவினால் உலகமுழுதும் லாபமாக வருவதா யிருந்தாலும்மேன்மக்கள் அதைவிரும்பார்கள். ஏனெனில், இரத்தலால் மானமெனும் பெருமைகுறைந்துபோய் விடுமென்பதினாலேதான்.

முயற்சியினால்வந்த கூழ் தண்ணீர்போல் தெளிந்ததாக விருந்தாலும் அது இரவாமல் முயற்சியால் வந்தபடியால் அம்ருதத்திற்கு ஸமானமாகக் கொண்டாடப்படு மென்பதே மேன்மக்களுடைய கருத்தாம்.

ஒருவன் தர்மத்தைச்செய்ய விரும்பினாலும் முயன்றுசெய்ய வேண்டுமே தவிர இரந்துசெய்யலாகாது ஏனெனில் பசியால்வருந்தி யுயிரிழக்குந்தன்மையி லிருக்கும் பசுவிற்கு நீர்வேண்டுமென்று கேட்கினும்நாவிற் கவமான முண்டென் றுரைத்திருப்பதினாலேதான்.

ஒருத்ருணத்தைக் காட்டிலும் லகுவானது பஞ்செனவும் பஞ்சைக்காட்டிலும் லகுவானவன் யாசகனெனவுங் கூறப்பட்ட விடத்தில்சிறியகாற்றினால் பஞ்சிற்குமாத்ரம் அலைவுண்டாயிருக்கின்றதேயல்லாமல்அவனுக்கொரு வருத்தமுமில்லையே என்றதற்குக்கரவு எ

ன்னவெனில், தன்னையும் யாசிப்பானென்கிற பயத்தினால் வாயு அவனை நெருங்கவில்லை யென்பதுதான்.

ஒருவன் எவ்வளவு கல்விமானாக விருந்தாலும் மானத்தைவிட்டு இரக்கப்புகுவானாகில் அவனது பெருமை குறைவது மல்லாமல் அவன் கற்றகல்விக்கும் பெருமைகுறையும். ஆதலால் அந்த அபகீர்த்திக்கு அவன்பாத்ரனாகவேண்டும்.

இரக்கப்புகுவது இழிவானதென்றுணைப்பதற்கு மிகவும் வெளிப்படையாக விருக்கிற "ஏற்பதிகழ்ச்சி" யென்னும வசனமொன்றே போதுமென்பதைக் கருதினால் விரிவாகச்சொல்ல வேண்டியதில்லை யென்பதுஸரியாம்.

இரந்து ஜீவனம்பண்ணுகிற யாசகன் மரணமடைகிறவனுக்கு ஸமானமாக ஒப்பிடப்படுகிறான். எப்படியெனில் ஒருயாசகன் ஒருப்ரபுவினிடத்தில் யாசிக்கப்போகும்போது அவனுக்குபயமும், அதனால் உடல்நடுக்கமும், வாய்குளறலும் உடற்றுவட்சியும் லஜ்ஜையும்உண்டாகின்றன. இக்குறிகள் மரணமடைகிற வனுக்கு முண்டென்பது கருத்து.

ஆகலால், கீழ்மக்களுக்குந் தகாதஇரவை யொருபோதும் நினையாமல் மானத்தோடு முயற்சிசெய்து ஜீவனமியற்றவேண்டும்.

---

## சொல்வன்மை.

சொல்வன்மையென்பது ஒருவன் முயலுங்கார்ய முடிவதற்குத் தகுதியான வார்த்தைகளைச் சொல்லுதலேயாம். ஆகலால், ஒருவன் சொல்லும்வசனம் நிதானமாயும் தகுதியாயு மிருக்கவேண்டும்.

ஸமாஜமென்னும் ஸபையினிடத்துச் சென்றஒருவன் தன்மனதிலுநித்த விஷயங்களை வெளியிட்டுப் பேசுதற்கு முன்னமே அந்தஸமாஜத்தாருடைய குணங்களையும் அவர்களது நிலமையையும் அறிந்து பின்பு பேசுவானாகில் உலகமுழுதும் வசமாகி நிற்குமென்றும் அவனுக்குக் கூடாதகார்ய மொன்று மில்லையென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸமாஜங் கூடியிருக்கு மிடங்களில் எப்போதும் புத்திமான்கள் மிதமாகவே யிருப்பார்கள். ஆனாலவர்கள் தங்கள்சொல்வன்மையால் அந்தஸபையிலிருக்கும் மற்றவர்களையும் தங்களோடு ஸமரஸப்படுத்திக்கொண்டு கார்யத்தை விரோதமின்றி நடத்துவார்கள். அப்படிக்கொத்த புத்திமான்மகளில்லாத ஸமாஜத்தார் ஒருகார்யத்தையும் நடத்த அறியார்கள்.

ஒருவனுக்குப் பெருக்கமும் குறுக்கமும் உண்டாவதற்கு ஸமயோசிதமான வார்த்தைகளின் சோர்வேகாரணமாக விருக்குமாதலால், பேசும்போது சோர்வில்லாத சொல்வன்மையைக் கொண்டு கார்யத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும்.

ஒருவன் பிறனோடு வசனிக்குமிடத்து முன்னடிதன் திறத்தையும் முன்னிலையின் திறத்தையுங் கண்டறிந்து பின்பு தான்நினைத்த வார்த்தையை வெளியிட்டுச் சொல்லவேண்டும். அப்படிசொல்வதைப் பார்க்கிலும் தர்மம் வேறில்லையென்று சொல்லப் பட்டிருக்கின்றது.

தான் மொழியுஞ்சொற்களை நம்பிக்கையால் ஒத்துக்கொள்ளுகிறவர்கள் அவைகளின் அபிப்ராயத்தில் நின்றும் வேறுபடாமலிருக்கும்படியாயும், நம்பிக்கையின்மையால் ஒத்துக் கொள்ளாதவர்கள் ஒத்துக்கொள்ளும்படியாயும், தகுந்த சொற்களையும் பொருள்களையும் அமைத்துப் பேசவல்லவனே புத்திமானெனப்படுவான்.

ஒருவன்தான் சொல்ல நினைத்தசொல் மற்றொருவன் சொல்லால் வெல்லப்படுமென்பதையும் வெல்லப் படாதென்பதையும் அறிந்து சொல்லுவானாகில் அது எப்போதும் மேம்பாடடைந் திருப்பதுமன்றி விரும்பிய பலனையுந் தராமற்போகாது.

பிறரோடுபேசி அவர்களுக்கு இன்பத்தையுண்டாக்கவும் நினைத்தார்யத்தை ஸாதித்துக் கொள்ளவும் விருப்பங்கொண்ட ஒருவன் தனது முன்னிலையின் அபிப்ராயங்களைக்குறித் தாக்ஷேபிக்கவேண்டுமானால் ம்ருதுவாயும் நயமாயும் ஸரியாயும் ஆக்ஷேபங்களை வெளியிட்டுத் தெரிவிக்கவேண்டுமே யல்லது கபடமாயும் வெறுப்பாயும் பேசலாகாது.

ஒருவன் மிகுந்த த்ரவ்யவானாயிருந்தாலும், கல்வியிற் சிறந்தவனாயிருந்தாலும், ஸமாஜத்திற் பேசத்துவக்கும்போது சிலவிநயவசனங்களைச் சொல்லவேண்டும். அவைகள் மிதமாயும் தகுதியாயும் இன்பமாயு மிருக்கவேண்டும். எப்படியெனில்—புத்தி மான்களாற்சிறந்த இந்த ஸமாஜத்தார் முன்பாகப்பேசும் திறமெனக் கில்லாமற் போனாலும் பேசவேண்டுமென்கிற விருப்பமுண்டா யிருக்கிறபடியால் புத்திமான்கள் தயைசெய்து செலவு கொடுக்கவேண்டுவது மல்லாமல் நான்பேசுவதில் காணப்படும் பிழைகளைக் குறித்துதயையுடன் மன்னிக்கவேண்டும்—என்கிறதுமுதலான உபசார வார்த்தைகளை ஸங்கதிக்குத் தக்கபடி மர்யாதையாய்ச் சொல்லவேண்டும்.

ஒருவிவாதஸங்கதியில் ஒருவன் பக்ஷத்தில் ந்யாயமும், அதற்குவேண்டிய ஸாதனங்களும் பூர்ணமாயு மிருந்தாலு மதைக்குறித்து எதிரியுடன் பேசுமிடத்து உரத்தசப்தத்துடனேயும், வெறுப்புடனேயும் பேசலாகாது. ஆனால் தனக்குள்ள தாத்பர்யங்களை விநயமாயும் ஶாந்தமாயும் சொல்லவேண்டும். அப்படி சொல்வதில் அவனுக்கு ந்யாயம் விளங்காமற் போகுங்காலத்தில் அதைநிறுத்தி வேறுவிஷயத்தில் ப்ரஸ்தாபத்தை மாற்றிப் பின்பொருவேளையில் தெரிவிக்கவேண்டும்.

துர்க்குணத்தைக் குறித்து இழிவாயும், நற்குணத்தைக் குறித்து மேன்மையாயும், பேசும் புத்திமானுடைய சிந்தை, ஒன்றையும் நாடாமல் ஸ்வபாவமாயும் பரிஶுத்தமாயு மிருந்தாலும், அறிவிலாரதை ஸரியாகக் கொள்ளாமல் ஒன்றை நாடிப் பேசுகிறதாக நினைப்பார்கள். ஆதலால் பேசும்விஷயம் ஆக்ஷேபிக்கிறதாக நினைக்கக் கூடாமலிருப்பதே சொல்வன்மையென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

எப்போதும் தொனுப்பாகப் பேசுகின்ற ஒருவன் தனது மெலிந்த த்வனியுடனே பேசுகிற நீடித்த வீண்ஸங்கதிகளைக் கேட்பதற்குத் தான்சென்றிருக்குங் கூட்டத்திலுள்ள ஒருநிர்ப்பாக்யனை ப்ரத்யேகப் படுத்திக் கொள்வதுண்டு. அப்படி ப்ரத்யேகப் படுத்திக் கொள்வது மிகவும் அஸம்ப்ரதாய மென்றும், சொல்வன்மைக்குப் பொருந்தாத செய்கையென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது.

ஒருகூட்டத்திலாவது மற்றெந்த விடங்களிலாவது ஒருவன் தன்விஷயமான ப்ரஸ்தாபத்தைப் பேசவேண்டும்பொழுது நேராயாவது பரஸ்பரமாயாவது தான் புகழ்ச்சியை விரும்பியதாகத் தோற்றப்படத்தக்க ஒருசொல்லையாவது தன்வாயிற் பிறக்க வொட்டாமல் ஜாக்ரதையாய்ப் பேசவேண்டும். இதுவேசொல்வன்மைக் குரிய தர்மமாம்.

நற்குடிப் பிறப்பினரும், மேன்மக்களும், கல்விமான்களும், அப்படியே புத்திமான்களும், ஒருஸபையிற் ப்ரவேஸிக்க உடன்படார்கள். ப்ரவேஸித்தால் ந்யாயத்திற்கு விரோதமாய் பேசத்துணியார்கள். ஏனெனில், பேசவேண்டியதைப் பேசாமலிருக்கும்படி சோர்வு நேரிட்டாலும் பேசவேண்டியதைப் பார்க்கிலும் அதிகமாய்பேசும்படிதுணிவு நேரிட்டாலும் குற்ற முண்டெனக் கூறப்பட் டிருப்பதினலேதான்.

ஆதலால், புத்திமான்கள் சொல்வன்மைக்குரிய விஷயங்களை யோசித்து அந்தப்படிபேச முயலவேண்டும்.

---

## செங்கோன்மை.

செங்கோன்மை யென்பது அரசனலே செய்யப்படும் முறையின்தன்மை. அந்த முறை செவ்வையாகிய கோல்போல் ஒருபக்கத்திலுஞ் சாயாமல் இருப்பதால் செங்கோலெனப்பட்டது.

தனது அரசாட்சியின்கீழ் வாழ்கின்ற குடிகள் முதலான ஜனங்களால் செய்யப்படுங் குற்றங்களைப் பரிஸோதித்து அவர்களுக்கு முகங் கொடாமல் நடுவுநிலைபொருந்தி அந்தந்தக் குற்றத்திற்குரிய தண்டனைசெய்து துஷ்டநிக்ரஹஞ் செய்தலே அரசர்கட்கு முறை யென்று கூறப்பட் டிருக்கின்றது.

உலகத்திலுள்ள ஸகலசராசரங்களும் வானத்தினின்று பொழியும் மழையை நோக்கி வாழ்வதுபோல தேஸத்தின் குடிகள் முதலான ஜனங்கள் அரசனது செங்கோன்மையி னின்று பொழியும் க்ருபாரஸமென்னு மழையை நோக்கி நன்குவாழ்வார்கள்.

அந்தணர்க்குரிய வேதங்களும், அவைகளிற்சொல்லிய தர்மங்களும், அறுதியென்றுரைக்கப்பட்டிருந்தாலும் அரசனுடைய செங்கோன்மையே அவைகட்குக் காரணமாக விருக்கின்றது. ஏனெனில், அரசனானவன் வேதியர்களை ஆதரித்து அவர்களுடைய கட்டளைச் செலுத்தும்படி செய்து தர்மங்களை நடத்தாவிடின் அவைகள் ப்ரகாசமாய் உலகத்தில் விளங்காவென்பதினாலேதான்.

தன்கீழ்வாழுங் குடிகள் முதலான ஜனங்களைத்தழுவி துஷ்டநிக்ரஹமும் ஸிஷ்டபரிபாலனமுஞ் செய்துவரும் செங்கோன்மையுடையமஹாராஜனது பாதாரவிந்தங்களை உலகத்திலுள்ள யாவருந்தழுவிவாழ்வார்கள்.

அணைத்தலென்பதின் பொருளிலடங்கிய இன்சொலுரைத்தல், தளர்ந்தவிடத்து வேண்டுமவைகளைக் கொடுத்தல், முதலாகிய நற்குணங்களையுடைய மஹாபுருஷனே நிலத்தை ஆள்வானுகையால் அவன் மாநிலமன்னனென்று சொல்லப்படுவதுமன்றி அவனிடத்து யாவரும் நீங்காத அன்புடையவர்களாவார்கள்.

தர்மநூல்களிற் சொல்லப்பட்டிருக்கும் விதிகள் தவறாமல் செங்கோல் செலுத்துகின்ற மன்னவனுடைய நாட்டில் காலமழையும் குறைவில்லாத விளைவுமுண்டாயிருக்கும், ஆதலால் செங்கோன்மையுடைய மன்னவனது நாட்டிலே வானமும் நிலமுஞ்சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்குமென முன்னோர்களுரைத்திருக்கிறார்கள்.

ராஜதர்மங்களை யறிந்து பிரபுத்வஞ்செய்கின்ற மஹாராஜாவானவன் ஜயம்பெறுவது அவனுக்குள்ள ஆயுதப் பயிற்சியினாலும் ஸேனாபலத்தினாலும் அல்லவெனவும், ஆனால் அவனதுநீதி தவறாத செங்கோன்மையினாலேதா னெனவும், முன்னோருரைத் திருக்கிறார்கள்.

கொடியோர், தீயோர், தீயிடுவோர், நஞ்சிடுவோர், கொலைபாதகஞ்செய்வோர், களவுசெய்வோர், வழிகட்டிப் பறிப்போர், பிறன்மனையாளை விரும்புவோர், இவைமுதலாகிய கொடியக்ருத்யங்களைச் செய்யும் துஷ்டர்களைக்கண்ட அரசன் அவர்களைத் தக்கபடி தண்டிக்காமல் விட்டுவிடுவானாகில் புல்முதலாகிய களைகளால் பயிர்கள்கெடு

தி யடைவதுபோல் உலகத்தார் பலவருத்தங்களை யடைந்து துன்பப் படுவார்கள்.

அரசனானவன் பூமிமுழுதையுங் காப்பாற்றுவான். அவ்வரசனது செங்கோலானது முறைதப்பாமல் செலுத்தப்படுமாயின் அவனைக் காப்பாற்றும். முறைதப்பாமல் செங்கோல்செலுத்தும் விதமகனைத் தேர்க்காலில் வைத்தூர்ந்த சோழனிடத்திலும், அயலார்வீட்டுக்கதவைத்தட்டிய தன்கையைக்குறைத்த பாண்டியனிடத்திலும் விளங்கும்.

ஆதலால், அரசரது செங்கோன்மையை யாவரும் விரும்பவேண்டும்.

---

# கொடுங்கோன்மை.

அரசனியற் றப்படும் முறையினது கோணுதற்றன்மையே கொடுங்கோன்மை யெனப்படும்.

பொருளைவிரும்பிக் குடிகளைவருத்தி முறையல்லாத கார்யங்களுக்குட் படுத்துகிற அரசனானவன் கொலைபாதகனைப் பார்க்கிலும் கொடியவனாவான். எப்படியெனில், கொலைபாதகன் செய்வது சிலருக்குச்சில நாளைத்துன்பம். இவன்செய்வதோ வெனில், எல்லோருக்கும் எந்நாளுந்துன்பமாம். ஆதலால் அவர்களிலும் இவன் கொடியவனாவானெனக் கூறலாயிற்று.

தனதுநாட்டில் நடந்துவருந்தீமைகளை யாராய்ந்து அவைகளை நீக்கத்தக்க முறைமையைச் செய்யாத ராஜாவானவன் தனதுராஜ்யத்தை யிழந்து போவது மல்லாமல் பழிக்கும் பாபத்திற்கு மாளாவான்.

இனிவருங்கார்யங்களை நினையாமல் முறைதப்பி யாளுகின்றமன்னவன் பூர்வார்ஜ்ஜிதத்தையும் அதற்குக்காரணமாகிய குடிகளையும் ஏககாலத்தில் இழந்துபோவான்.

அரசர்க்கு ஆதாரம் அவர்களியற்றுஞ் செங்கோன்மையாதலால், அஃதில்லாவிடின் அவர்களுடைய அரசாட்சிநிலைபெறாதென்பது நிலையாம்.

அளியென்னும் அருள்பொருந்தாத அரசனதுநாட்டில் வாழுங் குடிகளுக் குள்ளதுன்பம் எத்தன்மையதெனில், துளியென்னும் மழையினது இன்மையால் உயிர்களுக்கு நேரிடும் துன்பத்தின் தன் மையாம்.

ராஜ்கர்மம்தெரிந்து ப்ரபுத்வஞ்செலுத்த வறியாதவனும், தனக் குரிமையான கட்டமைக்கதிகங்கொள்ள விருப்புற்றவனுமான கொடுங் கோன் மன்னனுடைய நாட்டில்வாழுங் குடிகளுக்குச் செல்வத்தை ப்பார்க்கிலும் தரித்ரமேகொண்டாடத் தக்கதாயிருக்கும். ஏனெனி ல், அடி-குத்து-முதலானவைகள் பொருளுடையார்க்கே நேரிடுமெ ன்பதினாலேதான்.

ஸகலதர்மங்களையுங் காப்பதையே கட்டமையாக வுடைய ராஜா வானவன் தர்மந்தவறி நடப்பானாயின் அவனதுநாட்டில் எல்லாப் பொருளும் அழியுமென்பது ஸித்தமே.

உருண்டோடுகின்ற குண்டுக்கல்மேல் வைக்கப்படும் பொருளு ம்கொடுங்கோன் மன்னன் ஸிரஸின்மேல் வைக்கப்படும் முடியும் க்ஷ ணகாலமாவது நிலைபெறுதென்பதை யார்தான் ஒத்துக் கொள்ளார் கள்?

ஸகலஜனங்களுக்குங் கண்டகனாயிருக்கிற ராஜனிடத்தில் அ வனது நாட்டின் குடிகள்முதலான ஜனங்களுக்கும் நகரத்தின் ப்ரபு க்கள்முதலான மேன்மக்களுக்கும் அரண்மனையின் மந்த்ரிப்ரதானி ஸேநாபதி முதலான வீரருக்கும் பூர்ணமான பகையுண்டாயிருக்கு மாதலால், அவர்களேகோபித்துப் பரராஜனுக்குடன் பட்டுக்கண்டக னான தங்கள் ராஜனுக்கு ஆபத்துவரும்படி செய்வார்கள்.

ஆதலால், அரசர்கள் கொடுங்கோன்மையை வெறுக்கவேண்டி யது போலவே யஜமானர்கள் யாவருந் தங்களையடுத்தவர்க ளிடத்தி ற் கொடுமைசெய்யாமலினிமையைச் செய்துவரவேண்டும்.

முற்றிற்று.

# அதிகார அட்டவணை.

